உ

# ஸ்ரீ கார்த்திக் சுவாமி மந்திர்

## நாசிக் - பஞ்சவடி

# குடமுழுக்கு மலர்

28-1-1972







ஸ்ரீ காசி நாட்டுக் கோட்டை நகரச் சத்திரம்

மானேஜிங் சொஸைட்டி - வாரணசி

உ

சிவமயம்



# நாசிக்-பஞ்சவடி கார்த்திக் சுவாமி கோவில்

# குடமுழுக்கு மலர்

பதிப்பாசிரியர்

'சோமலெ'

28-1-1972

ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம்
மானேஜிங் சொசைட்டி

நகரச் சத்திரம்

வாரணாசி

உத்தரப்பிரதேசம்



விநாயகர், நகரத்தாரின் முதற் கடவுள். மரகத விநாயகரை வைத்து வழிபட்ட பெருமை நகரத்தாருக்கே உண்டு. அதன் நினைவாகவே மார்கழி மாதத்தில் சஷ்டி திதியும் சதய நட்சத்திரமும் சேரும் நாளில் பிள்ளையார் நோன்பு கொண்டாடப் பெறுகிறது.

மாராட்டியருக்குத் தலைமைத் தெய்வம் விநாயகர். அவர்களுடைய தேசியத் திருவிழா கணேஷ் சதுர்த்தி. அன்று அவர்கள் பாடும் பாட்டு இது :

''கண்பதி பப்பா மோரியா
புட்ச்யா வர்ஷி லவ்கர்யா
மோரியா ரே பப்பா மோரியாரே
ச்சைன் படேலா அம்பாலா மோரியாரே பப்பா''

விநாயகக் கடவுளே சென்றுவா, அடுத்த ஆண்டு சீக்கிரம் வா என்பது இதன் பொருள்.

நாசிக் பஞ்சவடி கார்த்திக் சுவாமி கோவில் திருப்பணியும் குடமுழுக்கும் எவ்வித இடையூறுமின்றி இனிது நிகழ, கார்த்திக்சுவாமி கோவிலிலுள்ள பஞ்சலோக விநாயகர், திருவருளை வேண்டுகிறோம்.



உ

சிவமயம்

காசி விசுவேசர் துணை

# முன்னுரை...

சேந்தனைக் கந்தனை செங்கோட்டு
வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
காரமயில் வாகனனைச்
சாந்துணைப் போதும் மறவா
தவர்க்குஒரு தாழ்வுஇல்லையே.

— அருணகிரிநாதர்.
(கந்தர் அலங்காரம்)

இறை அருளாலும் பெரியோர்களின் ஆசீர்வாதத்தாலும் ஸ்ரீகாசி விசாலாட்சி கோவில் குடமுழுக்கு விழா மூன்று மாதங்களுக்கு முன் இனிது நிறைவேறியது. அதைத் தொடர்ந்து, மற்றொரு குடமுழுக்கு விழாவினை நடத்தும் பேறு பெற்றிருக்கிறோம்.

மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் முப்பெருமைகளையும் முழுமை யாகப் பெற்ற நாசிக் பஞ்சவடியில் 1863 ல் பம்பாய் நகரத்தார்கள் கண்கண்ட கடவுளாய், கலியுகவரதனாய் விளங்கும் தண்டாயுதபாணிக்கு அழகுறக் கோவில் அமைத்தனர்.

ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரத்தின் ஆட்சியில் இக் கோவிலில் எக்குறையுமின்றிப் பூசைகள் நடைபெற்று வருகின்றன. திருவிழாக்கள் இனிது நிகழ்கின்றன. யாத்திரை வருபவர்களுக்கு மேன்மேலும் வசதிகள் செய்து கொடுக்கப்படுகின்றன. வருவாயைப் பெருக்குவதற்கான முயற்சிகளையும் செய்து வருகின்றோம்.

ஏறத்தாழ நூறு ஆண்டுகளுக்குப் பிறகு இந்தக் கோவிலுக்கு இப்போது குடமுழுக்கு விழா நிகழ்கிறது. கோவிலில் இன்றியமை யாத சீர்திருத்தங்கள் செய்யப் பெற்றுள்ளன. கோபுரம் திருத்தி உயரமாக அமைக்கப் பெற்றிருக்கிறது. இரத்தின வேல், தங்கக் கலசம், தங்க மயில் வாகனம் ஆகியவை புதிதாகச் செய்யப் பெற்றி ருக்கின்றன. இரத்தினக் கிரீடம் வேலை நடைபெற்று வருகிறது.

இந்தப் பணிகளுக்கு நன்கொடை வழங்கியுள்ள நகரத்தாருக்கு முருகன் அருள் சுரப்பாராகுக.

திருக் கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் 25–ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள், பரிபூரணம் யெய்த ஒரு வாரத்திற்கு முன்பு, இக்குடமுழுக்கு விழாவுக்கு அனுப்பிய வாழ்த்துச் செய்தியுடன் இம்மலர் தொடங்குகிறது.

வாழ்த்துச் செய்தி அனுப்பியுள்ள இராமனாதபுரம் சேதுபதி அவர்களுக்கும் எங்கள் நன்றி.

பஞ்சவடியில் தண்டாயுதபாணிக்கு அணிவிக்கப் பெறும் இரத்தினவேலினை ஆறுபடை வீடுகளிலும் ஏனைய கோவில்களிலும் வைத்துச் சிறப்பான பூசைகள் செய்ய அன்புடன் இசைவு வழங்கிய தமிழக அரசின் அறநிலைய அமைச்சர் மாண்புமிகு மு. கண்ணப்பன் அவர்களுக்கும், அறநிலைய ஆணையர் திரு. கே. எஸ். நரசிம்மன், பி. ஏ., பி. எல்., ஐ. ஏ. எஸ். அவர்களுக்கும் நன்றி கூறி முருகன் திருவருளை வேண்டுகிறோம்.

இவ்வாறு எங்கள் முயற்சிகளுக்குப் பலவகையில் உறுதுணையாக இருந்துவரும் பெருமக்கள் அனைவருக்கும் தண்டாயுதபாணியின் அருள் என்றும் நின்று நிலவுவதாக.

இத் திருத்தொண்டில் ஈடுபட்ட எங்கள் துணைத் தலைவர்கள் செயலாளர், துணைச் செயலாளர்கள், பொருளாளர், செயற்குழு உறுப்பினர்கள் ஆகியோரும், பம்பாய் நகரத்தார்களும், நாசிக் பஞ்சவடிக் கிளைச் சத்திரத்தில் எல்லா அலுவல்களையும் பொறுப்புடன் கவனித்துவரும் திரு. கோபாலசாமி அவர்களும் எல்லா நலங்களும் வளங்களும் பெற்று நீடு வாழ்க.

நாசிக் பஞ்சவடிப் பகுதியில் யாத்திரை செய்பவர்களுக்குப் பயன் படும் எல்லா விவரங்களையுமுடைய இந்தக் குடமுழுககு மலரை, முருகன் புகழ் மணக்கும் வெளியீடாகத் தந்துள்ள திரு. 'சோமலெ' அவர்களுக்கும் அவர்களுடன் ஒத்துழைத்த ஏனையோர்க்கும் முருகன் அருள் என்றும் விளைவதாக.

காசியில் விசுவநாதர் கோவிலில் மடைப் பள்ளியைப் புதுப்பிக்கும் வேலை தொடங்கியிருக்கிறது. இந்தப் பணி இனிது நிறைவேறவும், பீகார் மாநிலத்தில் கயா நகரச் சத்திரத்தில் காலத்தால் ஏற்பட்ட பழுதுகளைப் பார்த்துப் புதுப்பிக்கும் வேலை செம்மையாக நடைபெற வும் அப்பணிகளுக்கும் நகரத்தார்கள் உதவவும் கந்தன் கருணை பாலிப்பாராக.

நகரச் சத்திரம்
காசி
15-1-72

அள. அரு. சோமநாதன் செட்டியார்
தலைவர்
ஸ்ரீகாசி நகரச் சத்திரச் செயற்குழு

உ

சிவமயம்

காசி விசுவேசர் துணை

# பதிப்புரை

வேலுண்டு வினையில்லை
மயிலுண்டு பயமில்லை
குகனுண்டு குறைவில்லை

உயிர்கட்கு வேண்டுவன இகசுகம், பரசுகம், வீடுபேறு அல்லது முத்தி. இம்மூன்றையும் வழங்குபவன் முருகன். இகநலனை வள்ளியம்மையைக் கொண்டும் பரநலனைத் தெய்வயானை அம்மையைக் கொண்டும் முத்தி நலனை வேலாயுதத்தைக் கொண்டும் முருகன் நமக்கு அருளுகின்றான்.

இத்தகைய ஆற்றல் வாய்ந்த முருகனுக்கு மராட்டிய மாநிலத்தில் சென்ற நூற்றாண்டில் அமைந்த நாசிக் பஞ்சவடி கார்த்திக் சுவாமி கோவிலின் குடமுழுக்குவிழாவையொட்டி இம்மலரை வெளியிடுவதில் மகிழ்ச்சி அடைகின்றோம். இவ்வாய்ப்பினைத் தந்த காசி நாட்டுக் கோட்டை நகரச் சத்திர மானேஜிங் சொசைட்டிக்கும் அதன் தலைவர் உயர்திரு. அள. அரு. சோமநாதன் செட்டியார் அவர்களுக்கும் என் நன்றி உரியது.

கோவிலைப் பற்றிய விவரங்களும் முருக தத்துவத்தைப் பற்றிய பல குறிப்புக்களும், நாசிக் அதன் சுற்று வட்டம் பற்றிய கட்டுரைகளும் இம்மலரை அணிவிக்கின்றன. ஆறுபடை வீடுகள், பஞ்சபூத தலங்கள் போன்ற தமிழ் மரபுப்படி கோவில்கள் வகுக்கப் பெற்றிருப்பதுபோல் வடமொழி மரபில் இறைவன் ஒளிமயமாகக் காட்சி தருகிற தலங்கள் ஜோதிர் லிங்கங்கள் என்று வரையறுக்கப் பெற்றிருக்கின்றன. இவற்றுள் ஒன்றான திரியம்பகத்தைப் பற்றிய கட்டுரையும் மலரில் உள்ளது.

1963-ஆம் ஆண்டில் மார்ச் 19 முதல் 22 வரையும் 1971 இல் நவம்பர் 5, 6 ஆம் நாட்களிலும் யான் நாசிக் பஞ்சவடியில் தங்கினேன். அப்போது தெரிந்து கொண்ட செய்திகளும், திரு. கோபாலசாமி அவர்களும் திரு. பத்மகிரீசன் அவர்களும் அன்புடன் அனுப்பியுள்ள விவரங்களும் இம்மலர் உருவாக உதவின. மராட்டிய மரபுகளைப் பற்றி, இந்திய நாட்டின் தலைசிறந்த எழுத்தாளருள் ஒருவரான பம்பாய் எஸ். ஆர். டீக்கேக்கர் அவர்களிடமிருந்தும் இளைஞர் ஜோதி வெங்கடேஷ் அவர்களிடமிருந்தும் தெரிந்து கொண்டேன்,

முருக வணக்கம் பற்றி நூல்களில் படித்தபோது எனக்கு ஏற்பட்ட ஐயப்பாடுகளை அகற்றி விளக்கம் தந்த அறிஞர்கள் பலர். அவர்களுக்கு என் நன்றி.

ஞானியார் அடிகளின் சீடரும் சைவ சமயத்தில் ஈடுபாடுடையவருமான என் கெழுதகை நண்பர் கடலூர் T. K. நாராயண சாமி நாயடு அவர்கள் பேரன்பால் அன்னார் வெளியிட்ட ஒரு நூலின் பகுதியை இம்மலரில் அச்சிட்டிருக்கிறோம்.

சென்னை மறைமலையடிகள் நூல் நிலையத்தின் நூலகர் திரு. முத்துக்குமார சுவாமி எம். ஏ., பி. லிப். ச. அவர்கள் அன்புகூர்ந்து பல்லாற்றானும் உதவியுள்ளார்கள். மலரின் கையெழுத்துப் படியை சண்முகநாதப் பட்டணம் திரு. சுப. நல்லகருப்பன் அவர்கள் எழுதித் தந்தார்கள். அவற்றைத் தட்டெழுத்தில் திரு. வஜ்ரவேலு அவர்கள் வடித்துக் கொடுத்தார்கள்.

மலரின் மூவண்ண அட்டையை அழகுடன் தீட்டித் தந்த 'தினமணி கதிர்' ஓவியர் திரு. வைத்தியலிங்கம் அவர்களுக்கும், 'தினமணி' நாளிதழில் சுடர்ப் பகுதியில் இக்கோவிலைப் பற்றிய கட்டுரையை வெளியிடும் 'தினமணி' ஆசிரியர் அறிஞர் ஏ. என். சிவராமன் அவர்களுக்கும், 'தினமணி கதிர்' ஆசிரியர் திரு. சாவி அவர்களுக்கும், பிளாக்குகளை ஆக்கித் தந்த திரு. அந்தோணிக்கும் பக்தியுடன் அச்சு வேலையை நிறைவேற்றிய மெட்ரோபாலிடன் அச்சக உரிமையாளர் திரு. நடராஜ ஐயர் அவர்களுக்கும் என் நன்றி உரியது. இவர்கள் அனைவரும் முருகன் அருளை என்றென்றும் பெற்று இன்பமுடன் வாழ்வார்களாக.

முருகன் புகழைப் பாராயணத்திற்குரிய பாடல்களால் பாடியும் பயன் கருதாது அன்புடன் முருகனை வழிபட்டும், அன்பர்கள் அனைவரும் மும்மை நலங்களைப் பெறுவார்களாக.

முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே யீசன் மகனே - ஒரு கை முகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்.

— திருமுருகாற்றுப்படை

தைப்பொங்கல் 1972
சென்னை

'சோமலெ'

உ

குருபாதம்

தருமையாதீனம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக
ஞானசம்பந்த பரமாசார்ய
சுவாமிகள்

தருமபுரம், மாயூரம் P.O.

26—10—1971

" ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே "

' தென்னாடு சிவனுறை நாடு ' என்பது கண்கூடாக விளங்குமாறு தென்னாட்டில் சிவாலயங்கள் பலவற்றில் அரிய திருப்பணிகள் செய்து புதுக்கிய நகரத்துச் செட்டிமார்கள், வடநாட்டில் முதன்மை வாய்ந்த காசித் தலத்தில் விசாலாட்சியம்மை திருக்கோவிலில் பூஜை முதலிய உரிமைகளைப் பெற்று அதற்குப் பல திருப்பணிகளைச் சிறப்புற நடத்தி வருகின்றார்கள்.

இவர்கள் இராமாயணத்தில் சிறப்பாகக் குறிப்பிடப் பெற்ற ' நாசிக் பஞ்சவடி ' என்னும் தலத்தில் சிறந்த ஓர் இடத்தில் ஏறக்குறைய நூறாண்டுகட்கு முன்பே ஸ்ரீ தண்டாயுதபாணி திருக்கோவிலை அமைத்துப் பூஜை முதலியவற்றைச் சிறப்பாக நடத்தி வருகின்றார்கள். மகாராஷ்டிராவில் ' கார்த்திக் சுவாமி மந்திர் ' எனப் போற்றப் பெறும் இத்திருக்கோவிலில் இது பொழுது சில திருப்பணிகளை நிறைவேற்றிக் கும்பாபிஷேகம் வைத்திருப்பது மகிழ்ச்சிக்குரியது.

கும்பாபிஷேகம் சிறப்புற நிகழ்ந்து யாவருக்கும், எல்லா நன்மைகளையும் வழங்க ஆலவாய்ச் சொக்கன் அடிமலர்களைச் சிந்திக்கின்றோம்.

S. RAMANATHA SETHUPATHY,
RAJAH OF RAMNAD.
Hereditary Trustee and Chairman,
Rameswaram Devasthanam and
Hereditary Trustee, Ramnad Samasthanam
Devasthanams and Chatrams.

Phone No. 3.
Palace
RAMANATHAPURAM.

22—12—71

RAMANATHA SAHAYAM

நாசிக் - பஞ்சவடிவில் கார்த்திகேயனுக்கு குட முழுக்கு விழா விரைவில் நடைபெறப் போவதாகக் கேள்வியுற்று மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன். நகரத்தார் பெருமக்களின் அறப்பணி காசி முதல் குமரி வரையும், கடல் கடந்த பல நாடுகளிலும் புகழ்பெற்றது. குடமுழுக்கு விழா மிகச் சிறப்பாக நடைபெறவும், நகரத்தார் சமயத் தொண்டு மென் மேலும் சீரும் சிறப்புமாக வளரவும் எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

S. இராமநாத சேதுபதி

# சரவணப் பொய்கையில் அவதாரம்

## கவிஞர் கண்ணதாசன்

சரவணப் பொய்கையில் அவதாரம்—இந்த
தரணியெங்கும் உனது அதிகாரம்
முருகா திருக்குமரா தலைவா
முத்தமிழே உந்தன் அலங்காரம் !

அழகிய மாமணிக் கோபுரக் கலசத்தில்
அருள் ஒளி கண்டோம் திருமுருகா !
பழகிய கைகள் உன் திருமுகம் பார்த்ததும்
இணைவதைக் கண்டோம் திருமுருகா !

ஆறுமுகம் அன்பு கூறுமுகம்—அன்றி
வேறுமுகம் கண்டதில்லை !
ஏறுமுகம் எங்கள் வாழ்க்கையிலே காண
தேடுமுகம் செந்தூர் எல்லை !

பழம் கொடுத்தான் உனது சினம் வளர்த்தான்—தந்தை
பரம்பொருள் சிவஞான சூலாயுதம் !
பழனி வந்தாய் தமிழர் கழனி வந்தாய்—கொஞ்சும்
பால்மணம் மாறாத வேலாயுதம் !

தெள்ளு தமிழ்க் குறத்தி வள்ளி தனைமணந்த
தென்னரங்கம் கண்டோம் திருமுருகா !
சீற்றம் தணிந்ததென்று தேவியுடன் அமர்ந்த
திருத்தணிகை கண்டோம் திருமுருகா !

ஓம் முருகா ! அறிவோம் முருகா !
வருவோம் முருகா ! பணிவோம் முருகா!
முருகா! முருகா! முருகா!

—குமாரசம்பவம்
திரை இசைப் பாடல்கள்
வெளியீடு : வானதி பதிப்பகம்

# கார்த்திக் சுவாமி மந்திர்
# வரலாறும் இன்றைய நிலையும்

## முன்னுரை

வினைகளைப் பக்குவம் செய்ய, நம்மை ஆட்கொள்ளும் பரம் பொருளின் அருள் தேவை. சிவபெருமானைவிட முருகன் எளிதாக அருள் வழங்குபவன். அதனாலேயே நகரத்தார்கள், ஏனைய தெய்வங்களை விட முருகனிடத்தில் தனித்த ஈடுபாடு கொண்டிருக்கிறார்கள்.

கடல் கடந்த நாடுகளில் நகரத்தார்கள், குடும்பமில்லாத துறவு வாழ்வு வாழ்வதால் முருகனை தண்டாயுதபாணியாக வழிபடுகிறார்கள். கதிர்காமத் தெய்வம் இலங்கையின் ஈடு இணையற்ற இறைவனாகச் சிங்களவருக்கும் தமிழருக்கும் விளங்குவதால் அங்கு வாழும் நகரத்தார்கள் முருகனுக்கு அமைத்திருக்கும் கோயில்களுக்கு கதிரேசன் கோவில் எனப் பெயரிட்டிருக்கிறார்கள்.

## மராட்டியத்தில் முருகன்

முருக தத்துவம் மாநிலத்துக்கு மாநிலம் சிறிது வேறுபடுகிறது. மராட்டியக் கருத்துப்படி விநாயகருக்கு இருமனைவியர் உண்டு. கார்த்திகேயர் மணம் ஆகாதவர். அவருக்குக் கார்த்திக் சுவாமி என்று பெயர்.

கார்த்திக் சுவாமி பெண்களைப் பார்த்தால் அவருடைய (கார்த்திக் சுவாமியின்) 'பிரம்மச்சரிய விரதம்' கெட்டுப்போய் விடக் கூடுமாம்; அழகு வடிவான கார்த்திக் சுவாமியின் தோற்றத்தில் பெண்கள் மயங்கி விடுவார்களாம். ஆகையால் கார்த்திக் சுவாமி கோயிலுள் பெண்கள் செல்லுவதில்லை.

## பம்பாய் நகரத்தாரும் பஞ்சவடியும்

பம்பாய் மாநகரில் நாட்டுக் கோட்டை நகரத்தார் சிலர் வாணிகத்தில் ஈடுபட்டிருந்தனர். அவர்கள் அடிக்கடி நாசிக் பஞ்சவடிக்குச் சென்று கோதாவரியில் நீராடியும் அங்குள்ள கோவில்களில் வழிபட்டும் வந்தனர்.

1863 அளவில் பம்பாய் நகரத்தாரில் சிலர் பஞ்சவடிக்கு வந்ததாக மராத்தியர்களில் வயதானவர்கள் சொல்லக் கேள்விப்பட்டதாக, நாராயண அந்த்ருட்கர் என்ற நகரத்தார் பண்டா என்னிடம் 1963-ல் கூறினார். இவருக்கு அப்போது வயது 72. இவருடைய தகப்பனார் பாலாஜி சங்கர் (1843–1913) என்பவரும் நகரத்தாரின் பண்டாவாக இருந்திருக்கிறார். இவர் வழியினரே நகரத்தார்களுக்கு சங்கல்பம், சிரார்த்தம் முதலியன செய்து வைக்கின்றனர்.



நாசிக் பஞ்சவடி நகரச் சத்திரம் (கோவில் வீடு)

பஞ்சவடியிலுள்ள கார்த்திக் சுவாமி மந்திரும் மடமும் கட்டிடங்களும் இப்போது ஸ்ரீகாசி நாட்டுக் கோட்டை நகரச் சத்திரத்தின் ஆட்சியிலிருந்தாலும், இவை யாவும் பம்பாய் நகரத்தார்களால் கட்டப்பெற்றவையே.

நகரச் சத்திரம் பஞ்சவடியில் சனிசவுக் என்ற நாற்சந்தி அருகே மேற்குப் பாரத்த கட்டடம். இது ஆற்றிலிருந்து ஒரு பர்லாங் தொலைவிலும் இராமர் கோவிலுக்கு அருகேயும் அமைந்தது. சீதா குகை, பஞ்சவடி இரண்டும் சத்திரத்துக்கு அருகு. இவ்வளவு பொருத்தமான இடத்தைத் தேடி வாங்கியவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். கோதாவரியில் வெள்ளம் வரும்போது சிருங்கேரி சங்கரமடம் முதலிய பல சத்திரங்களில் ஆற்று நீர் உட்புகும். ஆனால் நகரச் சத்திரம் ஒரு காலும் பாதிக்கப்படுவதில்லை. காரணம், இது மேடான இடத்தில் இருப்பதே.

நகரச் சத்திரம் உள்ள கட்டடம் 1865 அளவில் தீக்சித் பண்டா என்பவரிடமிருந்து 800 ரூபாய்க்குப் பம்பாய் நகரத்தார்களால் வாங்கப்பட்டதாகத் தெரிகிறது. பிறகு, ஏறத்தாழ 8,000 ரூபாய் செலவில் அந்தக் கட்டடம் புதுபிக்கப் பெற்றது. அதற்காகச் செட்டி நாட்டிலிருந்து கொத்தர், தச்சர், கொல்லர் வரவழைக்கப் பட்டதாகவும் கேள்விப்பட்டேன். 1867 ஜனவரி 21உ சத்திரம் இக்கட்டடத்தில் பணியாற்றத் தொடங்கியது. இது இந்தக் கட்டட வாயிலில் நிலைக் கதவுக்குமேல் உள்ள கல்வெட்டில் குசராத்தியிலும் மராத்தியிலும் பொறிக்கப்பட்டதிலிருந்து தெரிகிறது. தமிழில் '' நகரமடம் '' என்று இந்தக் கல்வெட்டில் எழுதப் பெற்றிருக்கிறது. இந்தக் கல்வெட்டுக்கு மேற்கே, சுவரில் பதித்த பளிங்குக் கல்லில் இந்தியில் ''ஸ்ரீதண்டாயுதபாணி சுவாமி மந்திர்'' என்றும் தமிழில் ''நாட்டுக் கோட்டை நகரச்சத்திரம்'' என்றும் எழுதப் பெற்றிருக்கின்றன.

இந்தக் கட்டடம் முதலில் கோவில் வீடாக மட்டுமே இருந்து வந்தது. இப்போது கோவில் வீடாகவும் நகரவிடுதியாகவும் இருந்து வருகிறது. இது காலி இடங்களும் மண்டபங்களும் உடையது. இந்தக் கட்டடத்தின் இன்றைய மதிப்பு 60,000 ரூபாய்.

1955-ஆம் ஆண்டில் இக்கட்டிடத்தில் சுகாதார வசதிகள் செய்யப் பெற்றுள்ளன.

1970-ஆம் ஆண்டில் சமயற்கட்டும் பின்புறத்தில் புதிதாக ஒரு ஹால் கட்டி, தகரக்கூரை அமைக்கப்பட்டிருக்கிறது; மேல் வீட்டில் சிமிண்டுத் தளம் போடப்பட்டிருக்கிறது. குடமுழுக்கு விழாவை முன்னிட்டு 1971-72 ல் மேலும் சீர்திருத்தங்களும் பல புதிய வசதிகளும்நன்கு செய்யப்பட்டுள்ளன.

இந்தச் சத்திரத்தின் ஒரு சிறப்பு, இங்கு நமது ஏஜெண்டாக உள்ள முதியவராகிய திரு. கோபாலசாமி அவர்கள் ஐம்பது ஆண்டுக் காலம் காசிச் சத்திரப் பணியில் இருந்து வருவதாகும். காசி, கயா, அயோத்தி, ஹரித்துவார் ஆகிய இடங்களில் நமது கிளைச் சத்திரங்களில் இருபது ஆண்டுகள் தொண்டாற்றிய பிறகு, கடந்த முப்பது

ஆண்டுகளாக இவர் நாசிக் - பஞ்சவடியில் நாளும் பணி புரிந்து வருகிறார். இத்தகைய ஊழியர்களின் ஆர்வத்தை, மானேஜிங் சொசைட்டியர் நன்றியுடன் பாராட்டுகின்றனர்.

## புதுமடம்

நயாமட் என்றும், செட்டி தர்மசாலை என்றும் பெயருள்ள கட்டடம் நகரச்சத்திரம் உள்ள தெருவிலேயே எதிர் வரிசையில் நான்கு கட்டடங்களுக்கு அப்பால் இருக்கிறது.

இப்பொழுது சத்திரம் உள்ள வீடு கோவில்வீடாக இருந்ததால் நகரத்தார் யாத்ரீகர்கள் இறங்குவதற்கும் தைப்பூசத்தில் பிராமணர் களுக்கும் ஏழைகளுக்கும் சாப்பாடு போடவும் வசதியாக, பம்பாய் நகரத்தார்கள் புது மடத்தை ஏற்படுத்தினர். அந்தக் கூட்டத்தை 1905-இல் ஒரு வண்ணானிடமிருந்து ரூ. 1,500க்கு வாங்கி, சீர்திருத். தங்கள் செய்தார்கள்.

இக்கட்டிடத்தின் மதிப்பு ரூ 80,000. இதில், ஒரு பகுதி அஞ்சல் நிலையத்திற்கு 1946-ல் வாடகைக்கு விடப்பட்டிருக்கிறது. அந்த அஞ்சலகத்தின் பெயர் கலாராம் மந்திர் அஞ்சலகம்.

இந்தக் கட்டடத்தின் ஓரத்திலுள்ள சந்து யாரைச் சேர்ந்தது என்று பக்கத்து வீட்டுக்காரர்களுக்கும் நகரத்தார்க்கும் நாசிக் ஜூனியர் டிவிஷன் ஜாயின்டு சிவில் ஜட்ஜ் கோர்ட்டில் ரெகுலர் சிவில் நம்பர் 335-57 என்ற வழக்கும் அதன் பேரில் நாசிக் எக்ஸ்ட்ரா அசிஸ்டண்டு ஜட்ஜ் கோர்ட்டில் அப்பீலும் 5 ஆண்டு நடைபெற்றன. இவற்றில் 19-10-1959-இல் கீழ்க் கோர்ட்டிலும் 28-8-1961-இல் அப்பீல் கோர்ட்டிலும் முடிவு கூறப்பெற்றன. 2 தீர்ப்புக்களும் நகரத் தார்களுக்கே சாதகமாகச் சொல்லப்பட்டன.

நகரத்தார்களின் சார்பாகச் சாட்சி சொன்னவர்களை நம்பு வதாகவும் அந்தத் தீர்ப்புகளில் கண்டிருக்கிறது.

இக்கட்டிடத்தின் பின்புறத்திலிருந்த காலி இடத்தில் 1970-இல் பெரிய அறை ஒன்றும் சிறிய அறை ஒன்றும் கட்டி வாடகைக்கு விடப் பெற்றுள்ளன. ஏற்கெனவே வாடகைக்கு விடப் பெற்றுள்ள அறைகளின் வாடகையைக் கூட்டுவதற்கு, வாடகைக் கட்டுப்பாடு சட்டம் தடையாக இருந்து வருகிறது. எனினும் காசிச் சத்திர மானேஜிங் சொசைட்டியார் வருவாய்ப் பெருக்கத்துக்குரிய முயற்சிகளைச் செய்து வருகின்றனர்.

அஞ்சல் நிலையக் கட்டிடத்திற்கு வாடகையைக் கூடுதலாகப் பெறவும் ஆவன யாவும் தலைவர் அவர்கள் செய்து வருகிறார்கள். நாசிக் டிவிசன் அஞ்சல்துறை சீனியர் சூப்பரின்டண்டண்டு அவர் களையும், பம்பாயில் போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் அவர்களையும், நமது தலைவர் அவர்கள் சந்தித்து, வியாபார அடிப்படையில் (Commercial Rent) புதிதாக வாடகை ஒப்பந்தம் ஏற்படவேண்டும் அல்லது அவர்கள் கட்டிடத்தைக் காலி செய்து தரவேண்டும் என்பதை வலியுறுத்தியுள்ளார்கள்.

### பஞ்சமுகலிங்கம்

புது மடத்தில், மகாதேவ மந்திர் என்ற ஒரு சிறு கோவில் இருக்கிறது. இங்கு சிவபெருமான் பஞ்ச முகலிங்கமாக உள்ளார். இந்த லிங்கத்துக்குத் தினமும் காலை 9.30 மணி அளவில் ஒரு காலப் பூசை நடைபெறுகிறது. மகா சிவராத்திரி அன்று லகுருத்ராபிஷேகம் செய்யப்படுகிறது.

பஞ்சவடி இராமர் கோவிலில் 1942 வரை நகரத்தார்கள் அகண்ட தீபம் போட்டு வந்தனர். அதற்கு நாள்தோறும் எண்ணெய் கொடுத்து வந்தனர்.

1942-க்கு முன் பஞ்சவடி கபாலீசுவரர் கோவிலில் பால் அபிஷேகத்துக்கு தினசரி பால் கொடுத்து வந்திருக்கிறார்கள். தீபம் போட்டு வருகிறார்கள்.

### கார்த்திக் சுவாமி கோவில்

கார்த்திக் சுவாமி மந்திர் என வழங்கும் தண்டாயுதபாணி சுவாமி கோவிலில் பழநியாண்டவர் இடும்பன் திருவுருவங்களும் அவற்றுக்கு எதிரே மயில் திருவுருவங்கள் இரண்டும் வைக்கப் பெற்றுள்ளன. கோவிலுக்குச் சுற்றுச் சுவர்கள் இருப்பதால் வலம் வந்து வழிபட வசதியாக இருக்கிறது. பழநியாண்டவர் விக்கிரகத்தை பிரதிட்டை செய்ய, திருவண்ணாமலைப் பெரிய குருக்கள் இங்கு வந்ததாகக் கேள்வி.

---

# முருகன் புகழ் பரப்பியோர்–(1)

### திருப்போரூர் சிதம்பர சுவாமிகள்

சென்னைக்கருகில் உள்ள திருப்போரூரில் இன்று எழில் மிக்க கோவிலில் குடிகொண்டுள்ள முருகப்பெருமான் இருநூற்றைம்பது ஆண்டுகட்கு முன் ஒரு பனைமரத்தின் அடியில்தான் காட்சியளித்து வந்தார். பனங்காட்டுக்குள் குடிகொண்டிருந்த அப்பெருமானுக்குக் கோவில் கட்டிப் பேறுபெற்றவர் திருப்போரூர் சிதம்பர சுவாமிகள்.

அவர் முருகனடியார் மட்டுமல்ல. பெரும் புலவருமாவார். கோவில் கட்டுவதற்குப் பணம் இல்லையே என்ற வருத்தத்தோடு ஓடையில் அவர் குளித்துக் கொண்டிருந்தபோது அவரிடமிருந்த பொருள்களைக் கவரக் கள்வர்கள் வந்தனர். முருகன் அவர்களை அவ்விடத்திலேயே குருடாக்கி விட்டான். பிழையை உணர்ந்த திருடர்கள் தாம் திருடிய பொருளனைத்தையும் கோவில் கட்டுவதற்காக அடியாரிடம் கொடுத்தனர். அத்துடன் கூன், குட்டம், நொண்டி போன்ற நோய்களைக் குணப்படுத்திப் பொருள் சேர்த்து இன்றுள்ள கோவிலைக் கட்டி முடித்தவர் சிதம்பர சுவாமிகள்.

கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார் போன்ற நூல்களுக்கு அரிய உரையாற்றியுள்ள சிதம்பர சுவாமிகள் மதுரை மீனாட்சியம்மன்மீது 'மீனாட்சி கலிவெண்பாவைப் பாடியதோடு திருப்போரூர் முருகப்பெருமான் மீது 'திருப்போரூர் சந்நிதி முறை'யையும் பாடியுள்ளார்.



நாசிக் பஞ்சவடி நகரச் சத்திரம் (புது மடம்)

செட்டி நாட்டில் செய்து இங்கு கொண்டு வரப் பெற்ற பஞ்ச லோக விநாயகர் திருவுருவம் இருக்கிறது. அதனருகே நவக்கிரகப் படம் இருக்கிறது. மராட்டிய மரபுப்படி அமைந்ததால், இக் கோவிலில் வள்ளி, தெய்வயானை உருவங்கள் இடம் பெறவில்லை.

எந்த நாளிலும் எந்நேரமும் மராட்டியரும் ஏனைய மொழியினரும் இங்கு வந்து, கார்த்திக் சுவாமியையும் விநாயகரையும் வழிபட்டு மணியடித்துச் செல்லுகின்றனர். மராட்டியரில் ஆடவர் மட்டுமே வருகின்றனர்.

நாள்தோறும் காலை 9-30க்கும் மாலை 7-30க்கும் பூசை நடைபெறு கிறது. காலையில் கோதாவரி தீர்த்த அபிஷேகம், பால் அபிஷேகம், அன்ன நெய்வேத்தியம், கற்பூர நெய்வேத்தியம் நடைபெறுகின்றன. மாலையில் பால் நெய்வேத்தியமும் தீபாராதனையும் உண்டு.

## திருவிழாக்கள்

அன்றாடம் நிகழும் பூசைகள் தவிர கந்தர் சஷ்டி, திருக் கார்த்திகை, தைப்பூசம் ஆகிய முப்பெரும் விழாக்கள் கொண்டாடப் படுகின்றன. இந்நாட்களில் பதினொரு பேர் சேர்ந்து லகுருத்ரம் என்ற ஜெபம் செய்கின்றனர். அபிஷேகம், ஆராதனை, துறவி களுக்கும் ஏனையோருக்கும் உணவு படைத்தல் ஆகிய நிகழ்ச்சிகள் உண்டு.

தைப்பூசத்திற்கு, பம்பாயிலுள்ள தமிழர்கள் திரளாகவருகின் றனர். அன்று கார்த்திக் சுவாமியின் வேலும், விநாயகரின் உற்சவ உருவமும், கோதாவரி ராமகுண்டத்துக்கு எடுத்துச் செல்லப்

---

முருகன் புகழ் பரப்பியோர்—(2)

## வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள்

நூறு ஆண்டுகட்கு முன் முருகப் பெருமானிடம் காட்சி தரும்படி வேண்டினார், அடியார் ஒருவர். கலியுகக் கண்கண்ட தெய்வமான முருகனே அடியார் வேண்டுகோட்கு இரங்கவில்லை. செங்கோட்டை க்கு அருகிலுள்ள திருமலைக் கோயிலுக்குச் சென்று மலையுச்சியிலிருந்து கீழே உருண்டார். காட்சி கொடுக்காவிட்டாலும் முருகன் அடி யாருக்கு உடற்கேடு ஏதும் ஏற்படாது பார்த்துக் கொண்டார்.

அடியார் முருகனோடு முரண்பட்டது அந்த ஒரு முறை மட்டு மன்று. திருச்செந்தில் முருகன் அடியாரைப் பதினாறு நூல்கள் பாடுக என்று கட்டளையிட்டான். பாடினால் திருநீறும் சிவமணியும் தருவ தாக வாக்குறுதி வேறு கொடுத்தான். பதினொரு நூல்கள் பாடி முடித்த அடியார் முருகன் வாக்குறுதி கொடுத்தது போல் கொடுப்பாரோ மாட்டாரோ என்று ஐயமுற்றார். எழுதிய நூல்களை ஆற்றில் கிழித்தெறிந்தார்.

இவ்வாறு ஆற்றிலும் கடலிலும் மிதக்க விட்டவை போக இன்று கிடைத்துள்ளவை அவ் வடியார் பாடிய ஐம்பதினாயிரம் பாடல்கள். 1839-இல் நெல்லையில் தோன்றிய இவ் அடியார் மகான் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவார். 1898 இல் அவர் மறை வதற்கு முன் பாடிய பாடல்கள் தமிழின் சிறப்பையும் முருகனின் பெருமையையும் உலகுக் கெடுத்துக் காட்டுபவையாகும். இன்றும் அவருடைய அச்சேறாத ஓலைச் சுவடிகள் அவர் கடைசியில் வாழ்ந்த திருவாமாத்தூர் கௌமார மடத்தில் உள்ளன.

பெறும். தீர்த்தக் கரையில் அபிஷேக ஆராதனை செய்து கொண்டு, கோதாவரி திருமஞ்சனம் எடுத்துவந்து மூலவருக்கு அபிஷேகம் செய்யப் பெறுகிறது. தைப்பூசத் திருவிழாவில் பூசத்தன்று பிராமணர் சுமார் 100 பேருக்கும், மறுநாள் 100 பேருக்கும் சாப்பாடு செய்விக்கப்படுகிறது. தைப்பூசச் செலவனைத்தையும் பம்பாய் நகரத்தாரே ஏற்று வருகின்றனர்.

தைப்பூசத்துக்கு இந்தக் கோவிலுக்குரிய வெள்ளி அங்கி, நகைகள் காசியிலிருந்து கொண்டுவந்து தண்டாயுதபாணிக்கு அணிவிக்கப் பெறுகின்றன.

காசி நகரச்சத்திர மானேஜிங் சொசைட்டியின் தலைவர் இராமேசுவரம் இராமநாதசாமி கோவில் பரம்பரை டிரஸ்டி சோமநாதன் செட்டியார் அவர்களின் இடைவிடா முயற்சியால், அவசரநிலை, போர் ஆகியவற்றையும் சிறிதும் பொருட்படுத்தாது குறித்த வண்ணம் செயல்கள் யாவும் நடைபெற்று வருகின்றன. கோவில் சீர்திருத்தம் செய்யப் பெற்று, உயரமான ஒரு கோபுரமும் அமைக்கப் பெற்றிருக்கிறது. இரத்தின வேல், தங்கக் கலசம், தங்க மயில் வாகனம் ஆகியவை புதிதாகச் செய்து தமிழ்நாட்டிலிருந்து அனுப்பப் பெற்றிருக்கின்றன. இரத்தின கிரீட வேலை நடைபெற்று வருகிறது. கும்பாபிடேகத்துக்குரிய சாத்திர முறைப்படியான ஏற்பாடுகள் யாவும் செம்மையாகச் செய்யப் பெற்றுள்ளன. இப்பணிகளுக்கு நகரத்தார்கள் மனமுவந்து நன்கொடை வழங்கியிருக்கிறார்கள்.

இந்த விழா, மராட்டிய மாநிலத்தில் வாழும் தமிழ் மக்களுக்கு உவகை தரும் பெருவிழா. முருகன் அருள் அனைவர்க்கும் கிட்டுக!

—'லெ'

---

முருகன் புகழ் பரப்பியோர்—(3)

## பாம்பன் குமர குருதாச சுவாமிகள்

சுப்பிரமணியத்தின் பெருமையைச் சாத்திரங்கள் வாயிலாக விரித்துரைத்த பெருமை பாம்பன் சுவாமிகளுக்குத்தான் உரியது. பல உரைநடை நூல்கள் எழுதியுள்ளதோடு முருகன் மீது 6666 பாடல்களும் இவர் இயற்றியுள்ளார்.

1850இல் தோன்றியவர் குமரகுருதாசர். இளமையிலேயே முருகன் மேல் பற்று கொண்ட இவர் ஒரு நாள் திடீரென்று பாடும் இயல்பு பெற்று, பாடத்தொடங்கினார். இராமேசுவரத்திலிருந்த சேதுமாதவ ஐயர் பால் ஆறெழுத்து மந்திரம் கற்றவுடன் அதையே தம் வாழ்க்கையின் பற்றுக்கோடாகக் கொண்டார்.

மண வாழ்வு ஏற்று மக்கட் பேறு பெற்ற பின்னர் துறவு மேற்கொண்டார். பாம்பனை விட்டுச் சென்னையை யடைந்தவுடன் பல தலங்களையும் வழிபட வேண்டும் என்ற எண்ணத்தோடு சிதம்பரம், கும்பகோணம், தூத்துக்குடி முதலிய ஊர்கட்குச் சென்று மீண்டார். இறுதியாகக் காசியாத்திரையும் செய்தார். தம் முடிவை முன்னரே உணர்ந்து திருவான்மியூரில் தமக்கோர் இடத்தை அமைத்துக் கொண்டு 1929-இல் இறைவன் திருவடியை அடைந்தார். இன்று அங்கு இவர் பெயரில் மடம் ஒன்று கலாச்சேத்திரத்துக்கு அருகே உள்ளது. இவருடைய நூல்கள் குமர குருதாச சுவாமிகள் பாடல், ஸ்ரீமத் குமார சுவாமியம், சிறுநூற்றிரட்டு, திருவலங்கற்றிரட்டு என்ற தலைப்புகளில் அச்சாகியுள்ளன.

# நாசிக் பயணம்

இந்துக்களுக்கு மிகப் புனிதமான நகரங்களுள் ஒன்று நாசிக்.

பம்பாயிலிருந்து ஆக்ராவுக்குச் செல்லும் சாலையில் 115 மைலில் (185 கி. மீ.) நாசிக் இருக்கிறது.

சென்னையிலிருந்து நாசிக்குக்குச் செல்ல, பம்பாய் ரயிலேறி, பூனாவில் இறங்கி பூனாவிலிருந்து 120 மைல் (193 கி. மீ.) பஸ் அல்லது வாடகைக் காரில் பிரயாணம் செய்து நாசிக்கை அடையலாம். பஸ் பயணம் 5½ மணி நேரம் ஆகும்.

## நாசிக் ரோடு

இரயிலில் போய்ச்சேர, பம்பாயிலிருந்து நாக்பூர் அல்லது வாரணாசி செல்லும் எக்ஸ்பிரஸ் இரயில்களில் பயணம் செய்யலாம், 117 மைல் (18 ) கி. மீ.). இரயில் நிலையத்தின் பெயர் நாசிக்ரோடு. இங்கிருந்து நாசிக் 5½ மைல், பஞ்சவடி 6½ மைல், திரியம்பகம் 24 மைல். பஸ்ஸிலும் செல்லலாம்; டாக்சிகளும் கிடைக்கும். நாசிக் பத்ரகாளி மார்க்கட் வரை செல்லும் டாக்சிகளில் பயணம் செய்தால் எளிதில் நடந்து கோதாவரியைக் கடந்து பஞ்சவடியை அடையலாம்.

பம்பாயிலிருந்து நாசிக்குக்கு ஆகாய விமானத்திலும் செல்லலாம். கட்டணம் 35 ரூபாய். நேரம் அரை மணி.

## முக்திதாம்

இரயில் நிலையத்திற்கு மேற்கே அரை மைல் தொலைவில் தேவ லாலிக்குச் செல்லும் லாம் ரோட்டில் 'பிட்கோ' தொழிலதிபர் ஜெயராம்பாய் தாயாபாய், சலவைக் கல்லில் ஒரு கோவில் கட்டி யுள்ளார். இராமர், லெட்சுமணர், சீதை, லெட்சுமி நாராயணர், ராதா கிருஷ்ணர், ரத்மாயி, விட்டோபா, ஹநுமார், கைலாச பர்வதத்தில் பார்வதி—பரமேசுவரர், ஆதி சங்கராச்சாரியார் திருவுருவங்கள் இங்கு உள்ளன. திருப்புனல் வாயிலில் பாண்டி 14 தலங்களுக்கும் உரிய சிவலிங்கங்கள் இருப்பதுபோல, இங்கு 12 ஜோதிர்லிங்கங்களும் பிரதிட்டை செய்யப் பெற்றுள்ளன.

இம்மூர்த்திகள் துவாரகை சங்கராச்சாரிய சுவாமிகளால் இங்கு நிறுவப் பெற்றுள்ளன.

## பாதுகாப்புத் தளம்

நாசிக் அருகே ஆர்ட்டில்லரி டிரெயினிங் சென்டர் இருக்கிறது. இங்கு, நம் நாட்டைப் பாதுகாப்பதில் கண்ணும் கருத்துமாக இருக்கும் வீர ஜவான்களுக்கு, அண்மையில் இந்திய பாகிஸ்தான் போரில் சிறப்பான வெற்றியை இந்தியாவுக்கு ஈட்டித் தந்த ஜவான் களுக்குப் பீரங்கிப் பயிற்சியும் துப்பாக்கிப் பயிற்சியும் அளிக்கப் படுகின்றன. இதனருகே ஆகாய விமான நிலையமும், ஆகாய விமானப் படைத்தளமும், நம் நேச நாடாகிய ரஷ்யாவின் உதவியுடன் எம். ஐ. ஜீ. விமானங்கள் செய்யப்படும் ஹிந்துஸ்தான் ஏர்கிராப்ட் தொழிற்சாலையும் உள்ளன. பாதுகாப்புக் காரணங்களுக்காக, இவை பற்றி விரிவாக எழுத:இயலவில்லை.



1" : 1/2 mile
1
2
3
4
5
6
7
8
9
10
11
12
13
14
15
16
17
17A
17B
17C
18
19
20
21
22
23
24
25
நாசிக் - பஞ்சவடி
SHODE (DVL)

# நாசிக்--பஞ்சவடி

## வரைபடம்

### எண் விளக்கம்

1. பம்பாய்-டில்லி இரயில் பாதை
2. நாசிக்ரோடு இரயில் நிலையம்
8. இந்தியா செக்யூரிட்டி அச்சகம்
4. முக்தி தாம்
5. நாசிக்-பூனா சாலை
6. இந்திய அரசாங்க அச்சகம்
7. நாசிக் கடைவீதி
8. இராம சேது—நாரோசங்கர் கோவில்
9. கோதாவரி ஆறு
10. ராம குண்டம்
11. கபாலீசுவரர் கோவில்
12. சனி சவுக்
13. பஞ்சவடி நகரச் சத்திரம் (கார்த்திக்சுவாமி மந்திர்)
14. காலா ராமர் கோவில்
15. சீதா குகை
16. சிருங்கேரி சங்கர மடம்
17. தபோவனம்-இலக்குமி நாராயணர் கோவில்—கபிலா கோதாவரி ஆறுகளின் கூடல்
18. சென்ட்ரல் பஸ் நிலையம்
19. சோமேசுவரர்—கங்காபூர்ச் சாலை
20. திரியம்பகம் சாலை
21. திரியம்பகேசுவரர் கோவில்
22. குசாவர்த்த தீர்த்தம்
23. நீலாம்பிகை குன்றம்
24. காஞ்சி காமகோடிபீட சங்கர மடம்
25. பம்பாய்—ஆக்ரா சாலை

## நாசிக்கும் பஞ்சவடியும்

நாசிக், ஒரு மாவட்டத்தின் தலைநகர். மாவட்ட கலெக்டர், நீதிபதி ஆகியோர் அலுவலகங்களும் மத்திய சிறைச்சாலையும் இந் நகரில் உள்ளன. கோதாவிரியின் எதிர்க்கரையில் இருப்பது பஞ்சவடி.

தட்பவெப்ப நிலை : கோயம்புத்தூரை விட உயரமான தளத்தில் இந்த நகர்கள் உள்ளன. ஜனவரி மாதம் இங்கு மிகக் குளிர்ச்சியாக இருக்கும். ஏப்ரல் வேனிற்காலம். ஏனைய மாதங்களில் குளிர், வெப்பம் இரண்டும் அளவுடன் அமைந்து உடல் நலத்துக்கு ஏற்ற காற்று வீசும். தூய்மையாயும் ஈரமில்லாமலும் இங்கு காற்று அடிப்பதால் காசநோய் நீக்கம் பெற இது ஏற்ற இடம்.

உற்பத்தி : பலவகைப் பழங்களும் காய்கறிகளும், பச்சை மிளகாயும் சுவைமிகுந்த திராட்சையும் மணம் நிறைந்த வெங்காயமும் இங்கு ஏராளமாகக் கிடைக்கின்றன. பித்தளை, வெண்கலம், செம்பு போன்ற பல்வேறு உலோகங்களினால் செய்யப் பெற்ற பாத்திரங்கள் வெவ்வேறு அளவுகளிலும் அழகிய தோற்றங்களிலும் நல்ல வேலைப் பாடுடன் இங்கு கிடைக்கின்றன. இம்மாவட்டத்தில் காட்டுவளம் மிகுதி. ஏராளமாக, மர அறுவை ஆலைகள் நாசிக் நகரைச் சுற்றி உள்ளன. ஆசனப் பலகை, இவ்வூரில் வாங்கி போவதற்கு ஏற்றது. அவல், பூண்டு சட்டினி ஆகியவற்றுக்கு நாசிக் புகழ் பெற்றது.

வியாபாரம் : மகாராஷ்டிர மாநிலத்தில் வாணிபத்தால் செழிக்கும் பெரு நகரங்களுள் நாசிக் ஒன்று. ஏடு பார்த்துச் சோதிடம் சொல்லும் கலைஞர்களும், யாத்திரை வருபவர்களுக்கு உதவி வாழும் மக்களும் உள்ளனர். மார்வாரிகள், குஜரத்திகள் ஆகிய பல இனத்தவர்க்கும், நாடெங்குமுள்ள மடங்கள் போன்ற நிறுவனங்களுக்கும் இங்கு, சத்திரங்கள் இருக்கின்றன.

புனிதத்தன்மை : நாசிக்கும் பஞ்சவடியும் சிறந்த தலங்களாக, தொன்றுதொட்டு இந்துக்களால் மதிக்கப்படுகின்றன. காசியில் விசுவநாதப் பெருமான் அங்கு உயிர் பிரிபவர்களுக்கு வலது காதில் தாரக மந்திரத்தை ஓதி, அவர்களுடைய ஐம்பெரும் பாவங்களையும் போக்கி அவர்களுக்கு முத்தியை அருளுகின்றார். எல்லாம் வல்ல இறைவனையே வாட்டிய பிரமஹத்தி, நாசிக் பஞ்சவடியிலேயே நீங்கியதாகப் புராணங்களால் தெரிகிறது.

வரலாறு : கி. மு, 200 ஆம் ஆண்டிலேயே இந்நகர் புகழுடன் விளங்கியதாகக் கல்வெட்டுக்களிலிருந்து தெரிகிறது. இந்நகரைப் பற்றி கி. மு. முதல் நூற்றாண்டின் இறுதியில் ஏற்பட்டதும் நாசிக்குக்கு அருகே இருப்பதுமாகிய 18, 19வது பாண்டவ குகைகளிலும் பரத்பூர் என்னும் சிற்றரசில் காணப்படும் கல்வெட்டுக்களிலும் குறிப்புக்கள் உள்ளன.

இந்நகரை பத்ம நகரம், ஜனஸ்தானம் என்ற பெயர்களால் சமணர்களும், குலசனாபாத் என்ற பெயரால் முகமதியரும் குறிப்பிட்டுள்ளனர். ஹிந்துக்கள் கோதாச் சத்திரம், ஹரிஹரச் சத்திரம், இராமச்சேத்திரம், திரிகண்டகம் என்னும் பெயர்களை இவ்வூருக்கு வழங்கியுள்ளனர். நாசிக் பஞ்சவடியில் உள்ள கோவில்களின் பெயர்களாவன:

1. சுந்தர நாராயணர் கோவில்.

பெரிய பாலத்தின் அருகே உள்ளது. இதில் கார்த்திகை மாதம் வைகுண்ட சதுர்த்தசி சிறப்பு. 18 ஆம் நூற்றாண்டில் இது சில காலம் மசூதியாக இருந்ததாம்.

2. உமாமகேசுவரர் கோவில்.

இதிலுள்ள திரு உருவங்கள் மைசூர் மாநிலத்திலிருந்து மஹாராஷ்டிர அரசர்களால் கொண்டு வரப் பெற்றவை.

3. நீலகண்டேசுவரர் கோவில்.

இது ஜனக மகாராஜா காலத்தில் ஏற்பட்டதாகச் சொல்லுகிறார்கள்.

4. பஞ்சரத்னேசுவரர் கோவில்.

வைகுண்ட சதுர்த்தசி அன்று ஐந்து முகம் வைத்த வெள்ளிக் கவசத்தை இந்தச் சிவபெருமானுக்குச் சாத்துகின்றனர்.

5. நாரோ சங்கர் கோவில்.

6. ராமேசுவரம் ராம் மந்திர்.

ராமஸேது என்ற சிறிய பாலத்துக்கு அருகே அமைந்த சிவன் கோவில். பெரிய லிங்கம் உண்டு.

7. கோரே ராமர் கோவில்.

கோரே என்பது வெண்மை நிறத்தைக் குறிக்கும். இராமர், லெட்சுமணர் உருவங்களும், எட்டு துதிக்கைகளையுடைய விநாயகரும் உண்டு. ஏகாதசி நாட்களில் இராமர் புறப்பாடு நடைபெறுகிறது.

8. முரளிதரர் கோவில்.

நின்ற கோலத்தில் கிருஷ்ணனின் விக்கிரகம், வேணு கானத்தில் அமைந்திருக்கிறது. முக்கிய உற்சவம் கோகுலாஷ்டமி.

9. இலட்சுமி நாராயணர் கோவில்.

10. தாரகேசுவரர் கோவில்.

11. பாலாஜி கோவில்.

பாலாஜி என்பது வேங்கடாசலபதியைக் குறிக்கும். திருப்பதியில் கோவில் கொண்டிருக்கும் இறைவனைப் போலவே கோதாவிரிக் கரையிலுள்ள பாலாஜியும் செல்வச் செழிப்புடன் திகழ்கிறார். தங்கத்தாலான கிரீடம் முதலியன உண்டு. மராட்டிய அரசர்கள் இக் கோவிலுக்கு ஏராளமான சிற்றூர்களை நன்கொடையாக வழங்கியுள்ளனர். நவராத்திரி இக்கோவிலில் மிகச்சிறப்பாக நடைபெறுகிறது. இக்கோவில் நாசிக் சிட்டி போலீஸ் நிலையத்துக்கு அருகே காபட் பஜாரில் இருக்கிறது.

## 12. திலபாண்டேசுவரர் கோவில்.

தஞ்சாவூர் நந்தியைப் பற்றிச் சொல்லுவதுபோல, இக்கோவி லுள்ள சிவலிங்கமும் ஆண்டுதோறும் எள்ளளவு வளர்ந்து வருவதாகச் சொல்கிறார்கள். மகா சிவராத்திரியும் ஆவணி மாதச் சோம வாரமும் இக்கோவிலில் விசேட நாட்கள்.

## 13. விட்டோபா கோவில்

விட்டோபாவின் இருமருங்கிலும் ராதையும் ருக்மணி தேவியும் இருக்கின்றனர். பண்டரிபுரத்தில் கொண்டாடப்படும் திருவிழாக்கள் இங்கும் கொண்டாடப்படுகின்றன. இக்கோவிலிலும் ஐந்துமுக ஆஞ்சநேய சந்நிதி உண்டு.

## 14. கங்கா மந்திர்

இக்கோவில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை வியாழன் சிம்ம ராசிக்கு வரும்போது திறக்கப் பெற்று அந்த ஆண்டு முழுவதும் திறந்திருக்கும். ஏனைய ஆண்டுகளில் திருக்கார்த்திகை யன்று விளக்கேற்றுவதற்காகத் திறக்கப் பெறும்.

## 15. தர்கேட்கரின் கங்கா மந்திர்

## 16. இராம மந்திர்

இது இந்தூர் என்னும் தனி அரசை ஆண்ட அகலியாபாய்ப் பேரரசியால் கட்டப்பெற்றது.

## 17. கபாலீசுவரர் கோவில்

இது பழமையான கோவில். இக்கோவிலில் நந்தியம் பெருமான் சிவபெருமானுக்குப் பிடித்திருந்த பிரமதோஷத்தை நீக்கியதாக வரலாறு. கோவிலெங்கும் நந்தியே குருநாதராக விளங்குவதாகச் சொல்வார்கள். சிவலிங்கத்தின்முன் நந்தி இல்லை.

## 18. கோதாவிரி மந்திர்

தூய வெண்சிலையில் கோதாவிரிதேவி காட்சி தருகிறார்.

## 19. கார்த்திக்சுவாமி மந்திர்

## 20. காளே ராமர் கோயில்

காளே என்பது கறுப்பு நிறத்தைக் குறிக்கும். இப்போது இதை கலாராம் மந்திர் என்று சொல்லுகிறார்கள். இத்தலத்திலுள்ள முக்கியமான இராமர் கோவில் இதுவே. ராமநவமி 12 நாட்களும் பெரிய திருவிழா நடைபெறுகிறது. பதினோராவது நாள் ஏகாதசி யன்று இராமருடைய பாதுகைகளைப் பல்லக்கில் வைத்து வலம் வருகின்றனர்.

சங்கராந்தியன்று மகாராஷ்டர்கள் எள்ளும் சர்க்கரையும் சாப்பிட்டுப் புது மணமக்களுக்கு மேளதாளத்துடன் கொண்டுபோய்க் கொடுப்பார்கள். அன்று ஆயிரக்கணக்கான இளைஞர்கள் இராமரை இக்கோவிலில் வழிபடுவர். மறுநாள் பெண்கள் மட்டும் வந்து சீதா பிராட்டியாருக்கு மஞ்சள், குங்குமம், எள், சர்க்கரை ஆகிய வற்றைப்படைப்பார்கள். இராமநவமி இங்கு பெரிய திருவிழா.

## 21. சீதா குகை

இது ஐந்து ஆலமரங்களுக்கிடையே இருக்கிறது. இருள் சூழ்ந் திருப்பதால் தீபத்துடன் செல்ல வேண்டும். ஐந்து ஆலமரங்கள் என்பது பஞ்சவடி என்ற சொல்லின் பொருள்.

இராமபிரான் தங்கியிருந்த ஐந்து ஆலமரங்களால் அவ்வாறு பெயர் பெற்றது பஞ்சவடி. இப்போது விழுதை மட்டும் பேணி வைத் திருக்கிறார்கள். பஞ்சவடியில் இராமபிராமன் இருந்தபோது, சூர்ப்பனகை மூக்கு (நாசி) அரிந்த இடம். அக்காரணத்தால் நாசிக் என வழங்குகிறது.

கார்த்திக் சுவாமி மந்திரிலிருந்து ஒரு பர்லாங்குத் தொலைவி லுள்ள இந்த இடத்தில் இராவணன் துறவியாகப் பிச்சை வாங்க வந்த காட்சியையும், இராமபிரானது ஆசிரமத்தையும் காணலாம். பஞ்சவடிக்கும் இராமாயணக் கதைக்கும் தொடர்பு ஏராளம். இவற்றை அறிய விரும்புவோர், சென்னைப் பல்கலைக் கழகத்து ஹிந்திப் பேராசிரியர் டாக்டர் எஸ். சங்கர ராஜு நாயுடு அவர்கள் இயற்றிய நூலினைப் படித்துணர்க.*

## 22. ஸ்ரீ சாரதா சந்திர மௌலீசுவரர் கோவில்

## 23. துவாரகநாதர் கோவில்

## 24. காடர்யா மாருதி மந்திர்

## 25. நரசிம்மப் பெருமாள் மந்திர்

## 26. சனி மந்திர்

## தபோவனம்

பஞ்சவடிக்குக் கிழ்புறம் தபோவனம் இருக்கிறது. கார்த்திக் சுவாமி மந்திரிலிருந்து டாங்கா அல்லது டாக்சியில் மூன்று மைல் தொலைவுள்ள வழியில் செல்ல வேண்டும். நடைபாதை இரண்டு மைலுக்கும் குறைவு.

---

★ A Comparative Study of Kamba Ramayanam and Tulasi Ramayan. : pp. 9, 26, 27, 35, 36, 41, 59, 62, 182 — 185, 190, 191, 193, 198, 199, 203, 289, 305, 317, 322, 406, 457, 460, 470, 471, 473, 476, 480, 522.



பஞ்சவடியின் தோற்றம் (ஐந்து ஆலமரம்)



குசாவர்த்த தீர்த்தம், திரியம்பகம்



(நயாமட்) புதுமடம், பஞ்சவடி
1972 - இல் எடுத்த படம்

சூர்ப்பனகைக்கு மூக்கு அறுக்கப்பட்டது, இராமனின் இளவலாகிய இலக்குவன் தவம் செய்தது ஆகிய நிகழ்ச்சிகளால் பெருமை பெற்றது இவ்விடம். இங்கு கோதாவிரியுடன் கபிலி (கபலா) என்ற சிற்ருறு கூடுகிறது. சரசுவதி என்ற ஆறும் இங்கே கூடுவதாக நம்பிக்கை. லெட்சுமி நாராயணர் கோவிலும் இராமர் கோவிலும் இங்கு உள்ளன.

கோதாவிரியின் எதிர்க்கரையில் மஹாவிஷ்ணு ராட்சசர்களுக்கு மோட்சம் கொடுத்த இடமும், மான் உருவத்தில் வந்து ராட்சசர்கள் விளையாடிய இடமும் உள்ளன. சீதாதேவி மான் கேட்டது இங்கே தான்.

## வணி (தேவி கோவில்)

நாசிக்கிலிருந்து ஐம்பது கி. மீ. தொலைவு. கல்வண் பாதையில் இருக்கிறது. குன்றின்மீது, ஆற்றல் நிறைந்த அம்மன் ஐந்து அடி உயரத்தில் எட்டுக் கைகளுடன் அமைந்திருக்கிறது. மலையுச்சியில், தரையிலிருந்து நான்கு மைல் ஏறி, கோவிலைக் காணவேண்டும்.

## டாகேத் (தீர்த்தச் சிறப்பு)

ஜடாயுவுக்கு மோட்சம் அளித்த இடம். ஆக்ரா பம்பாய்ச் சாலையிலுள்ள, கோடி (Ghoti) என்ற இடத்திலிருந்து வில்சன் அணைக்குப் போவதற்குரிய சாலையில் 13-வது கி. மீ.ல் பிரிந்து செல்லும் சிறிய சாலையில் இத்தீர்த்தம் இருக்கிறது.

செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள திருவூறல் என்ற தலத்தினைப் போல, இங்கும் நீர் ஊறிக்கொண்டே இருக்கிறது. மூலம் தெரியவில்லை. ஜடாயுவுக்கு ஏற்பட்ட தண்ணீர்த் தாகத்தைப் போக்க இராமபிரான் தம் பாணத்தால் நீர் வரவழைத்த இடம் என்பர்.

## சீரடி

அகமத் நகர் மாவட்டத்திலுள்ள சிறு நகர். நாசிக்கிலிருந்து 72 கி. மீ. சாயி பாபாவால் புகழ் பெற்றது. விஜயதசமி இங்கு முக்கியமாகக் கொண்டாடப்படுகிறது. சாதி, சமய வேறுபாடின்றி அனைவரும் சாயி பாபாவை வணங்குகிருர்கள்.

## அஜந்தா

கிழக்கு காண்டேஷ் மாவட்டத்திலுள்ளது. உலகப் புகழ்பெற்ற ஓவியங்களும் புத்த விக்கிரகங்களும் உடையது.

## சிவாலயம் (கிருஷ்ணேசுவரர்)

நாசிக்கிலிருந்து அவுரங்காபாத்துக்குச் செல்லும் வழியில் வேருள் என்ற இடம் இருக்கிறது. இந்தச் சிவாலயம் 12 ஜோதிர் லிங்கதலங்களுள் ஒன்று.

## எல்லோரா

வேருளிலிருந்து ஒரு மைல் தொலைவு. சித்திர வேலைப்பாடுடைய ஜைனக் குகைகள் உலகப் புகழ் பெற்றவை.

## டௌலாதாபாத்

எல்லோராவிலிருந்து 12 கி. மீ. அவுரங்கசீபு என்ற மொகலாய அரசர் கட்டிய கோட்டை இங்கு இருக்கிறது.

## ஔரங்காபாத்

டௌலாதாபாத்திலிருந்து 24 கி. மீ. மராட்டிய மாநிலத்தின் முக்கிய ஊர்களுள் ஒன்று.

## சின்னூர்-கணபதி

நாசிக்-சீரடிச் சாலையில் நாசிக்கிலிருந்து 20 கி. மீ. மூன்று ஆள் உயரத்தில் விநாயகர் திருவுருவம் இருக்கிறது.

## பாண்டவர் குகைகள்

மகாராஷ்டிரத்தில் அஜந்தா குகைகள், எல்லோரா குகைகள், கர்லா குகைகள், எலிபெண்டா குகைகள் போன்ற பல குகைகள் உள்ளன. இத்தகைய குகைகளுடன் சேர்ந்தது பாண்டவலேணி. லேணி என்றால் மராட்டிய மொழியில் குகை.

பாண்டவ லேணி நாசிக்கிலிருந்து 8 கி. மீ. தொலைவில் பம்பாய்ச் சாலையில் அடிவாரத்திலிருந்து 100 மீட்டர் தொலைவில் திரியம்பக மலைத்தொடரில் இருக்கிறது. குன்று, திருச்சி மலைக் கோட்டையை விட உயரமானது. இவற்றைப் பார்ப்பதற்குப் பொருத்தமான காலம் ஜூன் மாதம்.

இக்குகைகள் 2-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டவை. இங்குள்ள திருவுருவங்கள் புத்தமதத்தைச் சேர்ந்தவை.

மொத்தம் 24 குகைகள் இருக்கின்றன. 3, 10, 17, 18, 21 ஆம் எண்ணுள்ள குகைகள், ஒவ்வொருவரும் கண்டிப்பாகப் பார்க்க வேண்டியவை. வண்ணக்கலையிலும் சரித்திரத்திலும் பழைய நாகரிகத்திலும் ஈடுபாடுள்ள அனைவரும் இந்தியாவில் காண வேண்டிய இடங்களுள் இதுவும் ஒன்று.

மஸ்ரூல் என்ற சிற்றூர் அருகே சார் பார் லேணி என்ற குகைகளில் சமணர் விக்கிரகங்கள் உள்ளன.





# வேலாயுதமும் சூலாயுதமும்

முருகனின் ஆறுபடை வீடுகளிலும், இராமே சுவரம், மதுரை, திருவண்ணுமலைக் கோவில்களிலும் வைத்து விசேடப் பூசைகள் நடத்திய பிறகு, நாசிக் பஞ்சவடிகார்த்திக் சுவாமிக்கு இரத்தினவேல் அணி விக்கப் பெறுகிறது. எனவே, கடவுளர்க்கு உரிய ஆயுதங்களைப் பற்றியும் வேலின் பெருமை பற்றியும் அறிவது நன்று.

## வேல்

வேல், முருகனுக்கே உரிய ஆயுதம். இந்த ஆயுதத்தை ஏந்தும் போது முருகனுக்கு வேலன், வேலாயுதன், வேலாயுதப் பெருமான், வடிவேலன், சக்திதரன் என்ற பெயர்கள் வழங்குகின்றன. வடி என்பது கூர்மையைக் குறிக்கும்.



விஷ்ணுவின் பிரயோகச் சக்கரம் போல முருகனுடைய வேல் ஒரு பிரயோக ஆயுதம். கையை விட்டுப்போய் மீண்டும் கையில் வந்து அமரும் தன்மையது. பழைமையான திருவுருவங்களில் இந்த வேலினைக் காணலாம்.

பிரயோக ஆயுதமாகிய வேலின் அடையாள மாக இப்போது ஆலயங்களில் முருகன் கையில் ஓர் ஆயுதம் கொடுக்கப்படுகிறது. கையில் வைத்துக் குத்துவதாக உள்ள நிலையில் அது வடிக்கப் பெற்றிருக் கிறது. இத்தகைய வேல் அம்பாளுக்கும் உண்டு;] ஆனுல் மாரியம் மனுகவோ பிடாரியாகவோ, துர்க்கையாகவோ உக்கிரமான நிலையில் இருக்கும்போது மட்டுமே இவ்வாயுதம் அம்பாளுக்கு உரியது.

சத்தி என்னும் ஒருவகை வேலும் முருகனுக்கு உண்டு. அம்பு போன்ற அமைப்பும் உச்சியில் மூன்று வேல்களைச் சேர்த்தது போன்றும் சத்தி இருக்கும்.



சூல்வேல் என்பது சூலாயுதம் போன்ற வேல், இதைப் பெரும்பாலும் முருகனே ஏந்துவான்.

முருகனுடைய தேவியாகிய வள்ளியம்மை இச்சா சக்தியாகவும் தெய்வயானை கிரியா சக்தியாகவும் இருப்பதுபோல அவனுடைய வேல் அவனுடைய ஞானசக்தியாக விளங்குகிறது. நாசிக் பஞ்சவடியில் முருகன் மணமாகாக் கோலத்தில் இருப்பினும், ஆற்றல், அருள் அறிவு மூன்றும் அடங்கிய நிலையிலேயே முருகன் உள்ளான். தமிழ் நாட்டில் அந்தத் தன்மைகளை வெளிப்படுத்திக் காட்டுகிறோம். மராட்டியத்தில் வெளிப்படுத்துவதில்லை. எனினும், இரு மாநிலங்களிலும் முருக தத்துவம் ஒன்றே.



மராட்டிய மாநிலத்தில் கணபதிக்கே எல்லாச் சிறப்புக்களும் உண்டு. தமிழ் நாட்டில் அனைத்துப் பெருமைகளும் முருகனுக்கே உண்டு. கணபத்யம் என்பது பரமேசுவரனை விநாயகர் என்ற மூர்த்தியாக வழிபடுவது. முருக வழிபாடு என்பது பரமேசுவரனை முருகனக வணங்குவது. கணபதியே பரமேசுவரன். முருகனே பரமேசுவரன். சிவபெருமானின் 25 மூர்த்தங்களுள் கணபதி ஒன்று. முருகன் ஒன்று.

## சூலாயுதம்

சூலாயுதம், உருவமாக உள்ள பரமேசுவரனுக்கு மட்டுமே உண்டு. அருவமாக உள்ள சிவபெருமானுக்குச் சூலாயுதம் கிடையாது.

சூலாயுதத்தின் மேற்பகுதியில் மட்டும் மும்முனைகள் உண்டு. வேலாயுதத்தில் மேலும் கீழும் மும்முனைகள் உண்டு.

சூல்தல் என்பது சங்க இலக்கியத்தில் குத்துதல், வெட்டுதல், அறுத்தல் என்ற பொருள்களில் ஆளப் பெற்றிருக்கிறது. சூல் என்னும் சொல் கூர்மையைச் சுட்டும்.



சூலாயுதம் தாங்கும்போது சிவனுக்குச் சூல் பாணி என்ற பெயருண்டு.

காளி, பத்ரகாளி, யமன் ஆகியோரும் சூலாயுதம் தாங்குவர். சூலம் ஏந்திய துர்க்கைக்குச் சூலினி என்று பெயர். சூலினி மந்திரம் மிகவும் ஆற்றல் வாய்ந்தது.

சிவனது சூலம், திருமாலின் சக்கரம், இந்திர னுடைய குலிசம் இவை ஒன்றேனும் சூரனை வெல்லுந் தரத்தன அல்ல; வேல் ஒன்றே சூரனை வெல்லக்கூடும் என்று திருவுத்தரகோசமங்கைப் பிள்ளைத் தமிழில், ''பூவில் வ்ரு.........'' எனத் தொடங்கும் பாடலி லும், அருணகிரிநாதர் இயற்றிய வேல் விருத்தத்தில் 'வெங்காள கண்டர்கைச்.........'' எனத் தொடங்கும் பாடலிலும் குறிப்பிடப் படுகிறது.

திருப்புகழில் வேலின் ஒளி, வேலின் அலங்காரம், வேலின் உக்ரம்; வேலின் உருவம், வேல் - மந்திரம், வேலின் பஞ்ச கிருத்தியம், வேலின் பெருமை, வேலைத் தியானிப்பதின் பயன் ஆகியவை கூறப் பெற்றுள்ளன. (விவரம் – முருக வேல் பன்னிரு திருமுறை. தொகுதி 5 - அநுபந்தத்தில் காண்க. உரையாசிரியர் இராவ்பகதூர் டாக்டர் தணிகைமணி வ. சு. செங்கல்வராயப் பிள்ளை).

வேல் வழங்குவது முருக வழிபாட்டுக்கு ஏற்றதாகும். இறை வனின் பிரதிநிதியாய் தீர்த்தவாரியில் நீரில் முழுகுவது திரிசூல வடிவ மான அஸ்திர தேவர். அதுபோல முருகனை வழிபட இயலாத இடங் களில் அஸ்திர தேவரை வழிபடுவதும் முருகன் அருளைப் பெறுவதும் ஞானநூல்களில் குறிப்பிடப்படுகிறது. குடமுழுக்கு நினைவாக, நாசிக்- பஞ்சவடியில் நிலைநாட்டப்பெறும் இரத்தின வேல் இந்திய நாடு சென்ற திங்களில் அடைந்த போர் வெற்றியின் சின்னமாக விளங்கி, நலம் பயப்பதாக.



# பார்வையாளர் ஏட்டிலிருந்து....

ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி துணை

விளம்பி வருஷம் ஆவணி மாதம் 20ம் தேதி இவ்விடம் சத்திரத்தில் இருக்கும் கோபாலசாமி நல்ல முறையில் எங்களைக் கவனித்து சேவைகளை செய்தார். சத்திரக் காரியங்கள் கோர்ட்டில் நடவடிக்கை நடப்பதால் நன்கு முறையாகக் கேஸ்களைக் கவனித்து வருகிறார். கோவில் பூஜைகளை சுத்தமாகவும் நல்ல முறையிலும் நடத்தி வருகிறார். சத்திரத்தையும் வெகு சுத்தமாக வைத்திருக்கிறார். அப்படி சேவை செய்யும் ஆள் கிடைத்தது, நகரத்தார்களின் அதிர்ஷ்டத்தால்தான். உண்மையுடன் உழைப்பவர்களில் இவரும் ஒருவர்.

ஸ்ரீ திருச்சி சுவாமிகள்.

உ

குரு அருள்

திருக்கைலாய யாத்திரையை மேற்கொண்டு செல்லும் வழியில் பஞ்சவடி வந்திருந்தோம். நகரத்தார் சத்திரத்தில் தங்கி அண்ணாமலையார் பூஜை செய்து கொண்டு சென்றோம். நகரத்தார் சத்திர காரியஸ்தர் திரு. கோபாலசாமி நல்ல முறையில் வேண்டிய உதவிகளைச் செய்தார். பாரதத்தின் தீர்த்தக் கரைகளில் சத்திரம் அமைத்த நகரத்தார் பரம்பரை வாழ்க!

தெய்வசிகாமணி,

4—3—1959. குன்றக்குடி,

திருவண்ணாமலை ஆதீனகர்த்தர்.

★

உ

முருகா

பஞ்சவடி

பிலவ, ஆவணி 6. 22—8—1961

இளம்பூரணன் இன்னருளால் இன்று இங்குவந்து நகரமடாலயத்தில் தங்கினேன். பூஜை உணவு முதலிய சகலவகைக்கும் அனுகூலமாக இருந்தது. ''சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவிரியினை வீரர் கண்டார்'' என்று கம்பநாடார் பாடியருளிய கோதாவிரியை அடியேனும் கண்டு களித்தேன்.

மடம் யாத்ரீகர்கட்கு மிக்க வசதியாக அமைந்துள்ளது. தரும குணசீலர்களான நகர தனவணிகர்களுடைய அறம் போற்றுதற் குரியது.

மடாலயத்தில் திரு. கோபாலசாமி அவர்கள் நல்ல முறையில் கவனித்து மடத்தின் வளர்ச்சியில் கண்ணும் கருத்துமாக இருப்பது பாராட்டுதற் குரியது. வாழி மடாலயம்.

அன்பன்,

**கிருபானந்தவாரி.**

ஆசிரியர்,

"திருப்புகழமிர்தம்" சென்னை.



**பிலவ வருடம் ஐப்பசி மாதம் 28-ந் தேதி. 13—11—1961**

நேற்றைய தினம் நாஸிக் வந்து இந்தியா ஸெக்யூரிடி பிரஸ் காலனியைச் சேர்ந்த திரு. B. R. கணபதி அய்யர் அவர்கள் வீட்டில் தங்கியிருந்த நான் இன்று பஞ்சவடியில் உள்ள நகர விடுதிக்கு வந்து அங்கு நடைபெற்ற கந்தர் சஷ்டி விழா வழிபாடு கண்டு களித்தேன். விழாக் காணப் பக்கத்திலிருந்து விடுதிக்கு வந்திருந்த சுமார் ஆண்களும் பெண்களுமாக ஐம்பது பேர் கொண்ட ஓர் கூட்டத்தில் முருகனைப் பற்றியும் இராமபிரான் பஞ்சவடியில் தங்கியிருந்த காலே, சூர்ப்பனகையை மூக்கு அரித்த இடமாதலால் கம்பராமாயணத்தில் சூர்ப்பனகை வந்த பகுதி பற்றியும் ஓர் உரை நிகழ்த்தினேன்.

பம்பாய்த் தமிழ்ச் சங்கத்திற்குத் தமிழ் விழாவிற்காக வர வழைக்கப் பெற்ற நான் இங்கு வந்து நகரத்தார் வாழ்கின்ற பகுதி யிலிருந்து ஆயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள இங்கு நீண்ட காலத்துக்கு முன்னமேயே நகரத்தாரால் கட்டப்பெற்றுப் பரி பாலிக்கப் பெற்று வரும் நகர விடுதியைக் கண்டு பெருமகிழ்வு எய்தினேன். அவ்விடுதியைக் கண் காணித்து வரும் வயது முதிர்ந்த கோபாலசாமி மிக்க அன்போடு உபசரித்தார்.

"சான்றோர் கவியெனக் கிடந்த
கோதாவிரியினை வீரர் கண்டார்"

என்று கம்பர் பெருமானால் பேசப் பெற்ற கோதாவரி ஆற்றைக் கண்டு, அதன் கரையிலுள்ள நகர விடுதியையும் கண்டு அங்கு உள்ள பெருமானின் கந்தர் சஷ்டி விழாவையும் காணும் பேறு பெற்று மகிழ்ந்தேன்.

**ராய. சொக்கலிங்கன்.**

13—11—1961.

# கோதாவரி

கோதாவரி ஆறு கங்கையின் மூத்த சகோதரியாகக் கருதப்பெறுகிறது. இதனால் கோதாவரிக்கு விருத்த கங்கை என்ற பெயர் உண்டு.

இக்காரணத்தால் இராமேஸ்வரம் இராமனாத சுவாமிக்கும் பர்வதவர்த்தனி அம்மனுக்கும் அபிஷேகம் செய்விக்க கங்கை நீரை எடுத்துச் செல்வோர், தாம் எடுத்த கங்கையில் ஒரு சிறு அளவை கோதாவரியில் விட்டு, கோதாவரியிலிருந்து சிறிதளவு நீர் எடுத்து, தம் கலத்திலுள்ள கங்கையோடு கலந்து கொள்ள வேண்டுமென்ற விதி ஏற்பட்டிருக்கிறது.

நாசிக் பஞ்சவடியில் கோதாவரி வடக்கேயிருந்து தெற்காக ஓடி பிறகு கிழக்கே திரும்புகிறது. ஆற்றின் மேற்கிலும் தெற்கிலும் நாசிக் நகரமும், கிழக்கிலும் வடக்கிலும் பஞ்சவடித் தலமும் இருக்கின்றன.

சிம்ம ராசியில் குரு இருக்கும் ஓர் ஆண்டு முழுவதும் கோதாவரியில் நீராடுவதற்கு மிகவும் சிறப்பானது. அப்போது கோதாவரியில் நீராடினால் அசுவமேதயாகம் செய்த பயனும் நூறாயிரம் கோதானங்கள் செய்த புண்ணியமும் கிடைக்குமென்று புராணங்கள் கூறுகின்றன. அந்த ஆண்டு 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை வரும். மாமாங்கம் என்றும் கும்பமேளா என்றும் பெயர்கள் வழங்குகின்றன.

நாசிக் பஞ்சவடிக்கு வருபவர்கள் கோதாவரியில் நீராடி முன்னோர்களுக்குச் செய்ய வேண்டிய கிரியைகளைச் செய்து, பஞ்சவடியிலுள்ள இராமர் சந்நிதியை வணங்க வேண்டும். பிறகு திரியம்பகத்துக்குச் சென்று கோதாவரி உற்பத்தியாகும் இடத்தில் நீராடி சிரார்த்த கருமங்கள் செய்து திரியம்பகத்தில் கோவில் கொண்டிருக்கும் ஈசனை வழிபட வேண்டும். பஞ்சவடியிலுள்ள கோவில்களுக்குச் செல்ல வேண்டும்.

நாசிக் பஞ்சவடியில் ஏராளமான தீர்த்தங்கள் உள்ளன.

1. கோவர்த்தன தீர்த்தம்.
2. பித்ரு தீர்த்தம்.
3. காலவ தீர்த்தம்.
4. பிரம தீர்த்தம்.
5. இரண விமோசன தீர்த்தம்.
6. கண்ணுவ தீர்த்தம்.
7. பாவநாச தீர்த்தம்.
8. விசுவாமித்திர தீர்த்தம்.
9. சுவேத தீர்த்தம்.
10. கோடி தீர்த்தம்.
11. அக்கினி தீர்த்தம்.
12. பிரம தீர்த்தம்.
13. சுக்கில தீர்த்தம்.
14. அகஸ்தியவிலய தீர்த்தம்.
15. இராமகயா தீர்த்தம்.
16. அருணா தீர்த்தம்.
17. சூரிய தீர்த்தம்.
18. சக்கர தீர்த்தம்.
19. அசுவினி தீர்த்தம்.
20. தசாசுவமேத தீர்த்தம்.

21. பிரயாகை தீர்த்தம்.
22. மேக தீர்த்தம்.
23. கோடி தீர்த்தம்.
24. அஹல்யா சங்கம தீர்த்தம்.
25. கபில சங்கம தீர்த்தம்.

இவை தவிர நாசிக்கிலிருந்து பஞ்சவடிக்குச் செல்வதற்கு கட்டப் பெற்றுள்ள பாலத்தின் அடியில் பத்துக் கண்கள் உள்ளன. இவற்றில் சிலவற்றில் நீர்ஓடிக் கொண்டிருக்கும்படி ஏற்பாடு செய்திருக்கிருர்கள். இந்த இடங்களில்தான் பெருவாரியான மக்கள் கோதாவரியில் நீராடுகிருர்கள். இவற்றில் குளிக்கும்போது குளத்தில் குளிப்பது போன்ற எண்ணமே ஏற்படுகிறது; ஆங்காங்கு குறுக்கே கட்டப்பட்டுள்ள ஓடு பாலங்கள் ஆறு என்ற பெயரை அகற்றி விடுகின்றன. இந்தப் படித்துறைகள் அல்லது கட்டங்களை, குண்டம் என்று சொல்லுவார்கள்.
அவற்றின் பெயர் வருமாறு:—

1. இலட்சுமண குண்டம்
2. தனுஷ் குண்டம்
3. இராம குண்டம்
4. சீதா குண்டம்
5. அகல்யா குண்டம்
6. சாரங்கபாணி குண்டம்
7. ஐந்து கோவில் குண்டம் என்னும் சூரிய குண்டம்
8. தசாசுவமேத குண்டமென்னும் கோரே இராமர் குண்டம்
9. இராம கயா குண்டம்
10. சிந்தோட்டியா மகாதேவர் குண்டமென்னும் பீஷ்வா குண்டம்
11. கண்டோபாவின் குண்டம்
12. ஓகா குண்டம்
13. வைசம்பாயன குண்டம்
14. முக்தேசுவரர் குண்டம்.
15. இந்திர குண்டம்

''புவியினுக் கணியாய், ஆன்ற
பொருள் தந்து, புலத்திற் ருகி,
அவியகத் துறைகள் தாங்கி,
ஐந்திணை நெறிஅ ளாவி,
கவியுறத் தெளிந்து, தண்ணென்று
ஒழுக்கமும் தழுவி, சான்ருேர்
கவியெனக் கிடந்த கோதா
விரியினை வீரர் கண்டார்''

என்று கம்பர் கோதாவரி ஆற்றின் சிறப்பைப் பாடியுள்ளார். 940 மைல் தொலைவுக்கு ஒடும் இந்த ஆறு இந்தியாவின் பெரிய ஆறுகளுள் ஒன்று; புனிதமான ஆறும் ஆகும். இது தோன்றும் இடத்தின் அருகேயுள்ள நாசிக்— பஞ்சவடியிலும், கடலுடன் கலக்கும் இடத்தில் கோதாவரி இரயில் நிலையத்துக்குச் சமீபத்தில் இராஜ மகேந்திரபுர நகரின் ஒரு பகுதியான அரியபுரத்திலும் சத்திரம் அமைத்துள்ள பெருமை நகரத்தாருக்கு உரிய தனிப்பெருமையாகும்.

# ★ ★ ★ பணம்!

பணம் என்றால் யாருக்குத்தான் ஆசையாக இராது ?

இந்தியாவில் செலாவணியாகும் நோட்டுகள் அச்சிடப்படுவது நாசிக்கில்தான்.

நாசிக் ரோடு இரயில் நிலையத்திக்கு வடபுறம் ஒன்றரை கி. மீ. தொலைவில் காந்தி நகர் என்ற பகுதியில் இந்தியா செக்யூரிட்டி பிரஸ் இருக்கிறது.

ரிசர்வு பேங்கு இந்த அச்சகத்தில்தான் நோட்டுகளை அச்சிட்டு, இங்கிருந்து எல்லா பேங்குகளுக்கும் அனுப்புகிறது.

அஞ்சல் அட்டைகள், அஞ்சல் கூடுகள், உள்நாட்டுத் தாள்கள், பதிவு அஞ்சல் உறைகள், அஞ்சல் தலைகள், கோர்ட் ஸ்டாம்புகள், ஆவணக் களரிகளில் பயன்படும் பத்திரத்தாள்கள் யாவும் இங்கே தான் அச்சிடப் பெறுகின்றன. பிறகு இவை இந்தியாவெங்கும் உள்ள அஞ்சல் நிலையங்களுக்கு அரசாங்கக் கருவூலங்களுக்கு அனுப்பி வைக்கப் பெறுகின்றன.

உரிய அலுவலர்களிடம் இசைவு பெறுபவர் மட்டுமே உள்ளே போய்ப் பார்க்கலாம். அவசர நிலைமை நிலவும்போது, நாட்டின் பாதுகாப்புக்காக, பார்வையாளர்கள் உள்ளே செல்ல இயலாது.

இது தவிர, அரசாங்கத்துக்கும் அஞ்சல் துறைக்கும் தேவையான பலவகையான நமூனுக்கள், பாரங்கள் ஆகியவற்றை அச்சிடும் கவர்மெண்ட் பிரிண்டிங் பிரஸ், இரயில் நிலையத்துக்கும் நாசிக் நகருக்கும் நடுவே, சம தொலைவில் இருக்கிறது. இது இந்தியாவின் மிகப் பெரிய அச்சகங்களுள் ஒன்று.



# ஜோதி சுற்றிவரும் முருகன் கோவில்

திண்டுக்கல் அருகேயுள்ள சின்னாளப்பட்டியில் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோவில் 1905ஆம் ஆண்டில் குமாரசாமி செட்டியாரால் தொடங்கப் பெற்று 59 ஆண்டுகள் கழித்து அவருடைய பேரன், சென்னை (தங்கசாலைத்தெரு) டாக்டர் G. S. குமாரசாமி M. B. B. S அவர்களால் முடிக்கப் பெற்றது.

நாள்தோறும் இரவு 7 மணி முதல் 8 மணி வரையிலும் சில நாள் இரவு 10 முதல் 12 வரையிலும், காலையில் 4 முதல் 5 மணி வரையிலும் இக் கோவிலில் ஒரு மணம் கமழுகிறது. இறைப் பற்று உள்ள சிலருக்கு வேல் போலவும் சிலருக்குத் தீபம் போலவும் சிலருக்குச் சக்கரமாகவும், சிலருக்கு வாழைத் தண்டு விளக்குப் போலவும் பேரொளி தெரிந்து விக்கிரகத்தைச் சுற்றி தீப ஆராதனைபோல வலம் வருகிறது.

சஷ்டி, கிருத்திகை, திங்கட் கிழமை ஆகிய நாட்களில் இந்தப் பேரொளி பெரிய உருவில் தெரிந்து. வடமேற்கே இருந்து வந்து கலசத்தின் அருகே இறங்குகிறது.

இந்தோனேசியாவில் சுமத்திராத் தீவின் தலைநகரான மைதான் டில்லி நகரத்தார்கள் அழகியதொரு தண்டாயுதபாணி கோவிலை அமைத்திருக்கிறார்கள். மூலப் படிமம் வெள்ளைக் கல்லிலும் விழாப் படிமம் வெண்கலத்திலும் அமைந்திருக்கிறது. இக்கோவில் 1890 அளவில் கட்டப் பெற்றபோது சின்னாளப்பட்டி குமாரசாமி செட்டியார், விடாமுயற்சியால் ஒரு காண்டராக்டர் ஆகி நாட்டுக் கோட்டை நகரத்தாருடைய கோவிலைக் கட்ட அவர் காண்டராக்ட் எடுத்தார்.

முருகன் அருளால் அவர் பெருஞ் செல்வராகி மைதான் டில்லி அரசில் உயர் பதவி பெற்றார். அந்நகரில் ஒரு மாரியம்மன் கோவிலை அமைத்தார். முருகன் கோயிலை, தம் சொந்த ஊராகிய சின்னாளப்பட்டியில் கட்டுவதற்காக அவர் இந்தோனேசியாவிலிருந்து வந்தார். அவருடைய எண்ணத்தை இனிது முடித்து வைத்த அவர் பேரர் வாழ்க. சதுர்முக முருகன் அருள் அனைவருக்கும் கிட்டுக.

---

" முருகா எனஉனை ஓதும்
தவத்தினர் மூவுலகில்
அருகாத செல்வம் அடைவார் ;
வியாதி அடைந்து நையார் ;
ஒரு காலமும் துன்பம் எய்தார் ;
பரகதி உற்றிடுவார்
பொரு காலன் நாடு புகார்
சமராபுரிப் புண்ணியனே "

( சிதம்பர சுவாமிகள் -
திருப்போரூர் சந்நிதி முறை )

---

# முருகனுக்குரிய பெயர்கள்

சேந்தனர், திருவிசைப்பாவில், முருகனுக்குப் பின்வரும் பெயர்களைச் சூட்டியுள்ளார்.

| | |
|---|---|
| மலைமகள் மகன் | சுப்பிரமண்ணியன் |
| குமர வேள் | சூர்தடிந்தோன் |
| வள்ளி மணளன் | கணபதி இளங்கிளை |
| சேந்தன் | கங்கை சிறுவன் |
| அழகன் | வேலன் |
| சுவாமி | மால் மருகன் |
| யானைக்கும் குழகன் | முருகவேள் |
| கோழிக் கொடியோன் | அறுமுகத்தமுது |
| சேனைக்காப்பான் | |

—சென்னைப் பல்கலைக் கழகத்தில் சொர்ணம்மாள் அறக்கட்டளை ஆதரவில் ஒன்பதாம் திருமுறை பற்றிய சொற்பொழிவில், அறிஞர் மு. அருணசலம் அவர்கள்.

முருகன் புகழ் பரப்பியோர்—(4)

## வள்ளி மலை வள்ளல்

எல்லாம் வல்ல அம்மையப்பனின் பெருமையை நால்வரின் தேவார திருவாசகத் திருமுறைகள் எடுத்தியம்புகின்றன. அறுமுகப் பெருமானின் அருளை வியந்து பாடுவது அருணகிரிநாதரின் திருப்புகழ் தான். அதனை அச்சிட்ட பெருமை வடக்குப்பட்டு த. சுப்பிரமணிய பிள்ளையைச் சேருமென்றல் அதன் புகழைப் பலரறியப் பரப்பிய பெருமை வள்ளிமலை வள்ளலாகிய திருப்புகழ் சச்சிதானந்த சுவாமி களுக்கே உரியது.

திருச்செங்கோட்டுக்கருகில் 1870-இல் தோன்றிய இப்பெருமான் இளமையில் கல்வியில் நாட்டமில்லாததால் மைசூர் அரண்மனை மடைப்பள்ளியில் பணியேற்றூர். அருளுள்ளம் அவரைப் பழனிக்கு அழைத்துச் சென்றது. முருகப்பெருமான் முன்னிலையில் சிறுவன் ஒருவனிடம் திருப்புகழ் பாடக் கற்று நாள்தோறும் தம் கணீரென்ற குரலால் அருணகிரியின் வாக்கைப் பாடி வந்தார்.

முருகன் ஆணையால் பொதிய மலையிலிருந்து நடந்தே முருகன் நீராட நீர் கொண்டு வந்துள்ளார். திருச்செந்தூர், கதிர்காமம், முதலிய பல தலங்களுக்கும் சென்று முருகனை வழிபட்டு அங்கங்கு திருப்புகழைப் பாடுவதற்குச் சபைகளைத் தோற்றுவித்தார்.

சிந்தைக்கினிய, செவிக்கினிய திருப்புகழ் வள்ளி கல்யாணம் என்ற சுவாமிகளின் பிரசங்க வெள்ளத்தில் மிதந்தவர் பலர். தமக் கென்று வள்ளிமலையில் ஆசிரமம் தொடங்கி 1917 முதல் 1948வரை அங்கேயே தங்கித் திருப்புகழைப் பரப்பி வந்தார். இமயம் முதல் குமரி வரையுள்ள தலங்களைப் பலமுறை வழிபட்டுள்ளார். 1950 இல் இவர் மறைந்த போது திருப்புகழ் சபைகள் பல பெருந்துயருற்றன.

இரா. முத்துக்குமாரசுவாமி
எம்.ஏ, பி. லிப்.சயி.,
நூலகர், மறைமலையடிகள் நூலகம், சென்னை-1.

# தமிழ்நாட்டிலுள்ள முக்கியமான முருகன் கோவில்களும் முருகன் சந்நிதிகளும்

## சென்னை

கந்தகோட்டம் வடபழனி
குமரகோட்டம் (நேத்தாஜி போஸ் ரோடு- சைனு பஜார்)

## செங்கற்பட்டு மாவட்டம்

திருத்தணி திருப்போரூர்
குமரகோட்டம் (காஞ்சிபுரம்)
ஆண்டவர் குப்பம் (பொன்னேரி)
தொழுப்பேடு இளையனூர் வேலூர்
உத்தரமேரூர்

## வட ஆர்க்காடு மாவட்டம்

வள்ளி மலை. எலத்தூர்
கம்பத்திளையனூர் கோவில் (திருவண்ணாமலை)
ரத்னகிரி (ராணிப்பேட்டை-வேலூர் வழியில்)

## தென் ஆர்க்காடு மாவட்டம்

மயிலம் சிதம்பரம் பாண்டிய நாயகம்

## சேலம் மாவட்டம்

திருச்செங்கோடு கொல்லிமலை
கந்தகிரி கந்தசாமி கோவில் (உடையாபட்டி)

## கோவை மாவட்டம்

சென்னிமலை பேரூர்
மருதமலை விசயமங்கலம்
திருமுருகன் பூண்டி விசயபுரம்

## தஞ்சை மாவட்டம்

திருவேரகம் (சுவாமி மலை) எட்டிக்குடி
சிக்கல் எண்கண்
வைத்தீசுவரன் கோயில்
திருவிடைக்கழி (தில்லையாடியருகே)

## திருச்சி மாவட்டம்

வயலூர்
விராலிமலை
குமரன் மலைக் குமரன் கோவில்
கொடும்பாளூர்

## மதுரை மாவட்டம்

திருப்பரங்குன்றம்
பழமுதிர்ச் சோலை (அழகர் கோவில்)
பழனி—திருவாவினன் குடி
சுருளி மலை
சுப்பிரமணியர் கோவில், சின்னாளப்பட்டி.
குறிஞ்சி ஆண்டவர் கோவில் (கோடைக்கானல்)

## இராமநாதபுர மாவட்டம்

குன்றக்குடி
உத்தரகோச மங்கை

## நெல்லை மாவட்டம்

திருச்செந்தூர்
சாலைக்குமரன் கோவில் (திருநெல்வேலி)
இலஞ்சி
பண்பொழி (திருமலை)
கழுகுமலை
வள்ளியூர்
ஊத்துமலை

## கன்னியாகுமரி மாவட்டம்

வேளிமலை
மருங்கூர்

வேல், முருகனுக்கு உரிய சிறந்த ஆயுதம். இதற்கு ஆறு நுனிகள் உண்டு. இக்காலத்துச் சிலர், காம்பு நீளமான அம்பையே வேல் எனக் கருதுகின்றனர். ''வேலன்று வென்றி தருவது'' என்று மன்னனுக்கு அறிவுரை வழங்க வந்த வள்ளுவர் குறிப்பிடுகிறார். இதனால் வென்றி தரும் சிறந்த கருவி வேல் என்பது அறியப்படும். வேலும் வென்றியும் வெல் என்னும் வேர்ச்சொல்லிலிருந்து விளைந்தனவே. அதனாலேயே வேல் தலையான கருவியாயிற்று. இதனை 'எஃகு' 'சுடரிலைவேல்' என அழைக்கிறது திருமுருகாற்றுப்படை.

நக்கீர தேவர்,

'' ஐயிரு வட்டமொடு எஃகு
வலந்திரிப்ப, ஒருகை''

என்று திருமுருகாற்றுப்படையில் கூறுகிறார். முருகன் தன் திருக்கை விரலால் வேலை வலமாகச் சுழற்றி வீரந்தோன்ற விளங்குகிறார் என்பது கருத்து. —முருகன்
திருவாவடுதுறை ஆதீன வெளியீடு)

# ஆறுபடை வீடுகளும் நகரத்தார்களும்

## 1. திருப்பரங்குன்றம்

இங்குள்ள சிவாலயம் திருப்பணிச் செல்வர்களாகிய அமராவதி புதூர் வயிநாகரம் நாகப்ப ஐயா, வேங்கடாசல ஐயா ஆகியோரால் 1893ல் திருப்பணி செய்து முடிக்கப்பெற்று குடமுழுக்கு நடத்தப் பெற்றது.

இத்தலத்தில் தைப்பூச நாளில் நகரத்தார், தெப்பத் திருவிழா நடத்துகிறார்கள்.

மதுரை நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் அன்னதான மடமும் விடுதியும் தெப்பக் குளமும் இங்கு நிறுவியுள்ளனர். சக்கந்தி சுப. க. சுப. குடும்பத்தார் சரவணப் பொய்கைத் திருக்குளமும், புது வயல் அ. சு. பழ. குடும்பத்தார் பசுமடமும், நாகப்ப செட்டியார் நந்தவனமும் அமைத்திருக்கிறார்கள்.

## 2. திருச்செந்தூர்

செட்டி கப்பலுக்குச் செந்திலாண்டவன் துணை. 'செந்திலாண்டவன் கோவில் கொண்டுள்ள இத்தலத்தில் நகரத்தார்கள் மாசி மாதத்தில் மசேசுவரப் பூசை நடத்தி வருகின்றனர். நகரத்தார்களுக்கு இங்கு ஒரு விடுதி இருக்கிறது.

பூலாங்குறிச்சி ராம. ப. வ. பொதுக் குடும்பத்தார் வேதசாத்திர பாடசாலையும், கண்டமாணிக்கம் மெ சி. பெரி. சோம. குடும்பத்தார் நந்தவனமும் அமைத்துள்ளனர்.

## 3. பழனி (திருவாவினன்குடி)

பழனி தலத்துக்கும் நகரத்தார்க்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இங்கு நள்ளிரவில் நடைபெறும் அர்த்தசாம அபிஷேகம் நகரத்தார் செலவில் நிகழ்கிறது. அப்போது பழனியாண்டவர் மலை மீது வலம் வரும் நேரத்தில் தீவட்டி பிடிக்கும் உரிமை நகரத்தார்களுக்கே இருந்து வருகிறது. இதற்கென மண்டபமும் கட்டளைகளும் ஏற்பட்டுள்ள்ளன.

மலைமீதுள்ள தண்ணீர்ப் பந்தர் தேவகோட்டை ராம. மெ. சித. வயி. ராம. குடும்பத்தாரால் நடத்தப் பெறுகிறது. இதற்கு ஏற்படும் செலவுகளுக்காக அவர்கள் நிலம் வாங்கி மூலதனம் வைத்திருக்கிறார்கள். மலைப்படியில் தீபங்கள் தேவகோட்டை தி. ராம. தி. குடும்பத்தாரால் போடப் பெற்றுள்ளன.

அடிவாரத்தில் நகரத்தார்க்குரிய இராக்கால மடம் இருக்கிறது. இங்கிருந்துதான் பூசைக்கு வேண்டும் பொருள்கள் யாவும் மலைக் கோவிலுக்கு அனுப்பப் பெறுகின்றன. இக்கட்டிடத்தைப் பத்து ஆண்டுகளுக்கு முன் கொப்பனாபட்டி மு. ப. மு. குடும்பத்தார் கவினுறு முறையில் புதுப்பித்திருக்கிறார்கள்.

அன்னதான மடம், கண்டனூர் குட்டையன் செட்டியார் முயற்சியால் நகரத்தார்களால் ஏற்படுத்தப்பட்டு நகரத்தார்க்குப் பெருமை தரும் முறையில் நடந்து வருகிறது. தைப்பூச நாளில் இங்கு பெரிய அளவில் உணவு படைக்கப் பெறுகிறது. மலேசியாவிலும் சிங்கப்பூரிலும் உள்ள நகரத்தார்களின் பேருதவியால் இந்த மடம் சீரிய முறையில் பழுது பார்த்துப் புதுப்பிக்கப் பெற்றிருக்கிறது.

இந்த அன்னதானமடம், நகரத்தார்களால் முன்னூறு ஆண்டுகளுக்குமுன் அன்னதானம் செய்தல், காவடி செலுத்துதல் முதலியவற்றுக்காக அமைந்தது. பல ஊர்களிலிருந்தும் நகரத்தார்கள் சர்க்கரைக் காவடிகளுடன் புறப்பட்டு ஐந்து நாட்கள் கால்நடையாக பக்தியுடன் பயணம் செய்து அன்னதான மடத்துக்கு வந்து சேருவது வழக்கம். இதிலுள்ள அன்னதான மண்டபத்தில் ஸ்ரீ ஞான தண்டாயுதபாணிக்கும் விநாயகப் பெருமானுக்கும் கோவில் உள்ளது. இக்கோவிலின் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் 5-12-1971 ல் இனிது நிறைவேறிற்று.

நகரத்தார்க்குரிய நந்தவனம் ஒன்றும் பழனியில் உண்டு. காரைக்குடி முரு. சா. குடும்பத்தார் அந்தணர் உணவு நிலையம் நிறுவியுள்ளனர். தேவகோட்டை திருமுருகாற்றுப்படை இலக்குமணச் செட்டியார் முயற்சியால் பசுமடமும் கண்டமாணிக்கம் சாத்தப்ப செட்டியார், சொக்கநாதபுரம் மெ. சு. உ. சுப்பிரமணியஞ் செட்டியார் இவர்களால் திருப்புகழ்ப் பாடசாலையும் அமைக்கப் பெறறிருக்கின்றன.

திருவாவினன்குடி சிவாலயம் காரைக்குடி நா. மு. சுப. குடும்பத்தாராலும் கண்டனூர் கு. ப. சு. பழ. குடும்பத்தாராலும் 1910ல் திருப்பணி செய்யப் பெற்றது. 1970ல் அவர்கள் முயற்சியால் மீண்டும் குடமுழுக்குச் செய்யப் பெற்றது.

## 4. சுவாமி மலை (திருவேரகம்)

திருவேரகம் என வழங்கும் இப் படைவீட்டில் மலை அடிவாரத்திலுள்ள கோவில் நகாத்தார்களால் திருப்பணி செய்யப் பெற்றது. அமெரிக்காவில் இப்போது விநாயகர் கோவில் கட்டும் முயற்சியில் ஈடுபட்டுள்ள கானாடுகாத்தான் டாக்டர் அழகப்பன் அவர்களின் முன்னோர்களாகிய வெ. அரு. அருணாசலம் செட்டியார், அவர் மகன் வெள்ளையப்ப செட்டியார் ஆகியோரே இத்திருப்பணியைச் செய்து 1907 - லும் 1927 – லும் குடமுழுக்கு விழா நடத்தியவர்கள்.

இங்கு ஒரு நகரவிடுதி கும்பகோணத்தில் தொழில் செய்த நகரத்தார்களால் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கட்டப்பெற்றது. ஒவ்வொரு கார்த்திகை நாளிலும் இங்கு துறவியர்க்கும், பிச்சைக்காரர்களுக்கும் உணவு படைக்கப் பெறுகிறது. இந்தச் சத்திரம் இப்போது டி. பி. எல். எஸ். சுப்பிரமணியம் செட்டியார் அவர்கள் மேற்பார்வையிலிருந்து வருகிறது. தமிழக அரசின் பிச்சைக்கார ஒழிப்புத் திட்டத்தால் கடந்த சில திங்கள்களாக துறவிகளோ பிச்சைக்காரர்களோ நகர விடுதிக்கு, கார்த்திகைச் சாப்பாட்டிற்கு வருவதில்லை. (Hindu 12-10-1971)

கானாடுகாத்தான் வெ. அரு., வெ. வீர. குடும்பத்தார்கள் இங்கு ஒரு பசுமடம் நடத்தி வருகிறார்கள்.

## 5. குன்றுதோர் ஆடல் (திருத்தணிகை)

சென்னை நகரத்தார்கள் நூற்றைம்பது ஆண்டுகளாக, தணிகைக் குமரனிடத்தில் ஈடுபாடு கொண்டிருக்கிறார்கள்.

சென்னை—பவளக்காரத் தெரு 34ஆம் எண்ணிலுள்ள தேவ கோட்டையார் கோவில் வீட்டுப் பழைய தண்டாயுதபாணி கோவில், 27ஆம் எண்ணிலுள்ள காரைக்குடியார் கோவில் வீட்டுப் புதுத் தண்டாயுதபாணி கோவில் ஆகிய இரண்டு கோவிலாரும் சேர்ந்து, திருத்தணிகையில் அறக்கட்டளைகளை நிறுவியுள்ளனர். இவர்களின் பிரதிநிதிகளாக முறையே தேவகோட்டை அழ. சுப. பழ. குடும்பத் தாரும், கானாடுகாத்தான் மு. சித. மு. குடும்பத்தாரும் இந்த அறங்களை மேற்பார்த்து வருகின்றனர்.

மலை அடிவாரத்தில் மலைப்படி அருகே நகரவிடுதியும் அதற்குக் கீழ் புறம் அன்னச் சத்திரமும் உள்ளன. இரண்டிலும் கோவில் கொண்டுள்ள விநாயகர் உருவங்களுக்கு நாள்தோறும் பூசை நடை பெறுகிறது.

மலை மீதுள்ள குமரனுக்கு அபிடேகத்திற்குப் பாலும் நெய்வேத்தியத்திற்கு அரிசியும் நாள்தோறும் நகர விடுதியிலிருந்து அனுப்பப் பெறுகின்றன. ஆடிக் கார்த்திகையன்று நகரத்தார் களுக்கும் துறவிகளுக்கும் ஏழைகளுக்கும் உணவு படைக்கப் பெறு கிறது.

அன்று, தணிகை மலையிலிருந்து இறங்கி, குமரன் நகர விடுதிக்கு வரும்போது அப்பெருமானுக்கு, நகரத்தார் பட்டுச் சாத்தி அருச்சனை செய்கின்றனர்.

## 6. அழகர் கோவில்

பழமுதிர்சோலை என்னும் முருகன் கோவிலே பெருமாள் கோவிலாக இப்போது விளங்குகிறது. அழகர் கோவில் திருப்பணி யாளர்கள் அமராவதி புதூர் வயிநாகரம் குடும்பத்தாரே ஆவர்.

### கடல் கடந்த நாடுகளில்

குறிப்பாக முருகனுக்கும் பொதுவாக இந்து மதத் துக்கும் நகரத்தார்கள் ஆற்றி வந்திருக்கும் தொண்டுகளைப் பற்றி 1-12-1971ல் சென்னையில் Institute of Traditional Cultures என்ற நிறுவனம் பயனுள்ள ஒரு கருத்தரங்கை நடத்திற்று. தக்கவர் பலர் அதில் கலந்து கொண்டனர். கருத்தரங்கின் முழு விவரம் ஆங்கிலத்தில் நூலாக அச்சிடப் பெற்று 1972 மார்ச்சு மாதத்தில் வெளிவருமென்று தெரிகிறது.

# ★ திரியம்பகம் ★

இது மலையடிவாரத்தில், நாசிக் நகரிலிருந்து 18 மைல் தொலைவில் அமைந்த ஊர்.

திரியம்பக மலை ஒரு குதிரையின் குளம்பு போன்ற வடிவத்தில் அமைந்தது கடல் மட்டத்திலிருந்து 2000 அடி உயரம். மலைமீது புலிகளும் மான்களும் உள்ளன. இம்மலையிலிருந்து உற்பத்தியாகும் ஆறுகளில் முக்கியமானது கோதாவரி. ஒரு சிறு ஊற்றில் கோதாவரி ஆறு பிறக்கிறது

திரியம்பகத்திற்கு, குசாவர்த்தத் தீர்த்தமும் கங்கா துவாரமும் மிக முக்கியமானவை. இவை தவிர பத்துத் தீர்த்தங்கள் உள்ளன. கங்கா துவாரத்தில்தான் கோதாவரி உற்பத்தியாகிறது.

திரியம்பகத்தில் முக்கியமான கோவில் திரியம்பகர் கோவில். உருவில் சிறியதாயிருந்தாலும், கறுப்புச் சலவைக் கற்களால் இது ஒரு பீஷ்வாவால் அழகாகக் கட்டப்பட்டிருக்கிறது.

இங்குள்ள ஆவுடையார், சுயம்பு. ஆவுடையாரில் பதிப்பிக்கப் பட்ட பாணமாக லிங்கம் அமையவில்லை. பிரமா, விஷ்ணு, மகேசன் என்ற மூன்று பாணங்களும் ஆவுடையாரும் ஒரே உருவமாயும் சுயம் பாகவும், எக்காலத்தும் நீர் நிறைந்த கரு வறையில் உள்ளன. நீரை இறைத்து ஆராதனைகளை முடிக்குமுன் மீண்டும் நீர் ஊறி விடுகிறது. ஸ்ரீரங்கத்தில் வைகுண்ட ஏகாதசியில் ரெங்கனுதருக்குச் சாத்தப் படுவதைப் போல இரத்தின கிரீடம் இங்கு இருக்கிறது.

திரியம்பக மூர்த்தி இந்தியாவிலுள்ள 12 ஜோதிர் லிங்கங்களுள் ஒன்று. எனவே புனிதமானது. மகா சிவராத்திரி இங்கு பெரிய விழா. அன்று, தேவகோட்டை அரு. அரு. குடும்பத்தார் செலவில் ஆண்டுதோறும் லகு ருத்ர அபிஷேகம், திரியம்பக மூர்த்திக்குச் செய்யப்படுகிறது.

காஞ்சி காமகோடி பீடம் ஆசாரிய சுவாமிகள் 1971 ஏப்ரல் 29-ல் இங்கு சங்கர மடம் நிறுவி, ஆதிசங்கர பகவத் பாதாளின் திருவுரு ங்களை வைத்திருக்கிறுர்கள்.

தமிழ்நாட்டில் தேவார நாயன்மார் போல மராட்டிய மாநிலத்தில் ஞானேசுவரர் பக்திப் பாடல்கள் பாடி., சமயத்தைப் பரப்பிய அருளாளர் ஆவார். அவருடைய அண்ணன் நிவருதினுத் என் பவரின் சமாதிக் கோவில் திரியம்பகத்தில் இருக்கிறது. மார்கழி ஏகாதசியில் நிவருதினுதர் குரு பூசைக்கு இரு நாருயிரம் மராட்டியர் கூடுவர்.

திரியம்பகத் தலத்துக்குச் செல்லாவிடில் நாசிக் பயணம் முற்றுப் பெருது. வாடகைக்கு டாக்சி கிடைக்கும். ஆக்ரா சாலையில் மாவட்டக் கச்சேரி அருகேயுள்ள நாசிக் சென்ட்ரல் பஸ் நிலையத்தி லிருந்து, முன்கூட்டிப் பெயர் பதிந்து, திரியம்பகத்துக்குப் பஸ்ஸி லும் செல்லலாம்.



## திருப்புகழ் பெற்ற
## திரியம்பகம்

உரையொ ழிந்துநின் றவர்பொரு ளௌிதென
உணர்வு கண்டுபின் திரவிய இகலரு
ளொருவர் நண்படைந் துளதிரள் கவர்கொடு
பொருள்தேடி

உளம கிழ்ந்துவந் துரிமையில் நினைவுறு
சகல விந்த்ரதந்த் ரமும்வல விலைமக
ளுபய கொங்கையும் புளகித மெழமிக உறவாயே

விரக வன்புடன் பரிமள மிகஉள
முழுகி நன்றியொன் றிடமல ரமளியில்
வெகுவி தம்புரிந் தமர்பொரு சமயம துறுநாளே

விளைத னங்கவர்ந் திடுமல மனதிய
ரயல்த னங்களுந் தமதென நினைபவர்
வெகுளி யின்கணின் றழிதொழி லதுவற அருள்வாயே

செருநி னைந்திடுஞ் சினவலி யசுரர்க
ளுகமு டிந்திடும் யடியெழு பொழுதிடை
செகம டங்கலும் பயமற மயில்மிசை தனிலேறித்

திகுதி குந்திகுந் திகுதிகு திகுதிகு
தெனதெ னந்தெனந் தெனதென தெனதென
திமிதி மிந்திமிந் திமிதிமி திமியென வருபூதம்

கரையி றந்திடுங் கடலென மருவிய
உதிர மொண்டுமுண் டிடவமர் புரிபவ
கலவி யன்புடன் குறமகள் தழுவிய முருகோனே

கனமு றுந்த்ரியம் பகபுர மருவிய
கவுரி தந்தகந் தறுமுக வெனஇரு
கழல்ப ணிந்துநின் றமரர்கள் தொழவல பெருமாளே. (258)

# திரயம்பக மூர்த்தி

**தேவாரம் :**

சேர்வரு யோகதியம்பகனே சிரபுரமேய தியம்பகனே - 4018
தீர்த்தமான தியம்பகன் திரிசூலத் தன்னகையன் – 6367

என்பனவுங் காண்க. மேலும் இந்த யோக வடிவாகிய மிருத்துஞ்சய மூர்த்தியானது மேலே குறித்தபடி உமாதேவியாருடன் சேர்ந்து ஒருங்கிருப்பதன் தத்துவத்தை.

**தேவாரம் :**

மதிநுதல் மங்கையோடும் வடபால் இருந்து
மறை ஓதும் எங்கள் பரமன் - 2391
மழுவினர் மான்மறிக் கையர் மங்கையைக்
கெழுவின யோகினர் - 4256

**திருவாசகம் :**

பந்தணை விரலியும் நீயும் அடியார் பழங்
குடில் தொறும் எழுந்தருளிய பரனே – 375

**திருவிசைப்பா :**

மங்கையோடிருந்தே யோகு செய்வானை - 143

**திருக்களிற்றுப்படியார் :**

ஆகமங்கள் எங்கே அறுசமயம் தானெங்கே
யோகங்கள் எங்கே உணர்வெங்கே—பாகத்
தருள் வடிவும் தானும் ஆண்டிலனேல் அந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு - 5

என்னுந் திருவாக்குகளாலும் உய்த்துணர்ந்து கொள்க.

இவரது திருநாமமானது மகாமிருத்துஞ்சய மூர்த்தி என்றும், அமிர்த மிருத்துஞ்சய மூர்த்தி என்றும் வழங்கும். மிருத்து-மரணம், மரணத்தைச் செய்யும் காலன் ஆணவமலம், (மிருகேந்திரம்) அமிர்தம் - இறப்பின்மை, அழியாமை, வீடு பேறு. சயம் – வெற்றி. ஆன்மாக்களின் அனத்தம், அழிவுகளுக்கெல்லாம் மூலகாரணமா யுள்ளது அநாதிபந்தமாகிய ஆணவமலம். ஆதலினுலே அதுவே மகாமிருத்து எனப்படும். இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன், அநாதிமலமுத்தன், ஆதலினுலே மிருத்துஞ்சயர் எனப் படுவர். தாம் அநாதிமலமுத்தராக இருப்பதன்றி அநாதிமல பெத்தர் களான ஆன்மாக்களின் பந்தபாசங்களையும் அறுத்து, யோக ஞானத்தை உணர்த்தி வீடுபேறு அளிப்பவராயிருத்தலினுலே அமிர்த மிருத்துஞ்சயர் எனத் திருப்பெயர் வழங்கலாயிற்று. இவற்றை,

**தேவாரம் :**

பாசமான களைவார் பரிவார்க்கு அமுதம் அணையார் - 2341
பந்தபாசம் அறுக்க வல்லார்களே - 3330

**திருவிசைப்பா :**

பந்தபாசம் எலாம் அறப் பசுபாசம் நீக்கி – 219

என்னுந் திருவாக்குகளாலும் இன்னோரன்ன பிறவற்றாலும் உணர்ந்து கொள்க.

இம்மூர்த்தியினது ஆயிரம் நாமத்தில் (சகஸ்ர நாமாவளியில்) ஏழுவகை மிருத்துக்களையும் அடக்கியவர் எனப் பொருள் குறிக்கும். 'சப்த மிருத்யுப் பிரசம நாய நம:' என்னும் மந்திரம் ஒன்று காணப் படுகிறது. மிருத்து என்பது மேற்குறித்தபடி மூலமலத்தின் பரியாய நாமமாகிய காரணப் பெயராதலினாலே அந்த ஆணவ மலத்தின் காரிய வேறுபாடுகளாயுள்ள ஏழுவகை மிருத்துக்களையும் கீழ்ப்படுத்தியவர் என்பதே இதன் உண்மைப் பொருளாம். 'மூல (ஆணவ) மலம் காரிய வேறுபட்டால் ஏழுவகைப்படும். அவையாவன: மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்பனவாம்.' (சி. போ. வெ. 12) என்னும் சிவஞானபாடியப் பகுதியால் ஆணவத்தின் காரிய வேறுபாடாகவுள்ள எழுவகை மிருத்துக்களையும் அறிக. இன்னும் இவற்றின் விளக்கத்தை மாபாடியத்திற் கண்டு கொள்க. இதுகாறும் உரைத்தவாறு இந்த மிருத்துஞ்சய மூர்த்த மானது, இறைவன் ஆன்மாக்களுக்கு யோக முத்தியை அருளுதற் பொருட்டுத் தமது அறக்கருணையாற் கொண்டருளிய யோக வடிவம் என்பது தெற்றென விளங்கும். இந்த யோகமானது ஆதாரயோகம், நிராதாரயோகம் என இருவகைப்படும். அவற்றுள்,

1. ஆதாரயோமாவது : மூலாதாரம் முதலாகிய ஆறு ஆதாரங் களிலும் உள்ள தடத்த வடிவங்களாகிய அருவத் திருமேனியைத் தியானித்துச் சமாதி கூடுதல். கருவிகளை நீக்கித் தத்துவ வடிவாய் நின்று கரணங்களால் பாளிக்கும் பாவனையாகிய இஃது அபரஞான மாகிய ஆகம அறிவால் ஆவதாம். இது சாலம்பயோகம் எனவும் படும். (யோகம் - கூடுதல், கலத்தல், தியானம், ஆதாரம், ஆலம் பணம் என்பன ஒரு பொருட்கிளவி. இடம், சார்ந்திருக்கும் இடம் என்பது பொருள். கருவி - உடம்பு, மெய், வாய் முதலிய புறக் கருவிகள். கரணம் - மனம் முதலாகிய அகக்கருவிகள். சமாதி - ஒரு நெறிய மனத்தால் இறைவனைத் தியானித்தல்.)

2. நிராதாரயோகமாவது ; உண்மையறிவானந்த உருவமாகிய சொரூப சிவத்தைக் கருவி கரணங்கள் அனைத்தும் நீங்கி, அறிவுத் தொழில் மாத்திரையானே தியானித்து நிட்டை கூடுதல். இது நிராலம்ப யோகம் எனவும் படும். தசகாரியத்தில் முடிவாயுள்ள சிவயோகம் எனப்படுவதும் இதுவே.

(வித்வான் திரு. ந. சிவப்பிரகாச தேசிகர் தொகுத்து எழுதிய ''ஸ்ரீ மிருத்யுஞ்சய ஆயுள் ஓம சாந்தி பத்ததி'' என்னும் நூலின் முதல் பாகத்திலிருந்து இக்கட்டுரை எடுக்கப்பட் டுள்ளது.)

வெளியிட்டவர்
உயர்திரு. தி. கி. நாராயணசாமி நாயுடு
2, சீதாராம நகர், கடலூர்—1

# KARTIKEYA

**Kartikeya** is known by many names: Skanda, Kumara, Senani, Guha, Shanmukha, (=Shadanana) and Shikhivahana. In fact, the **Amara - Kosha** lists 17 names and many more could be formed. Although the popularity of Gajanana, the brother of Kartikeya is increasing in Maharashtra, the other brother does not seem to gain favour in this part of the country.

In the first place, Kartikeya of Maharashtra is entirely different from his image current in the South. The popular image of the two brothers, Gajanana and Kartikeya, is not the same all over India. The differences are many; they are major ones and cannot be easily brushed away.

The Krishna river seems to be the dividing line. North of the Krishna, Kartikeya is considered the elder of the two brothers; he is a confirmed bachelor and his temple is out of bounds for all women. Ganesha on the other hand has two wives, and he is the most popular deity amongst men, women and children.

South of the Krishna, the conditions are entirely different; perhaps the respective roles of Ganesha and Kartikeya are reversed. Ganesha is unmarried, waiting to pick up a companion of his choice and Kartikeya has two wives and he is very popular amongst women (accompanied by children).

The differences are there; it is almost impossible to account for them. Another minor difference is about the seniority among the two brothers. Tradition current in Maharashtra favours Kartikeya to be the elder and the **Kumara - Sambhavam** of Kalidasa supports that view. Against this, the tradition south of the Krishna, considers Ganesha to be the elder, (the **Agrajanma**). The **Amara Kosha** seems to be of that view; as in the order of seniority Ganesha is mentioned first.

Because of the difference in conception about the social position of the deity, Kartikeya could not be so popular in Maharashtra. Women by their nature are the custodians of family traditions and religious beliefs. When they are not allowed to visit the temple of Shadanana, the temple is almost deserted. There are penalties

prescribed for those women who against the injunction, visit the Kartikeya temple. They may not have any issue at all ! Who among the fair sex wants to be so cursed ? That is why Kartikeya has not been popular in Maharashtra.

At Poona, on the Parvati Hill, there is a Kartik Swami temple. It is customary to refer to the bachelor Kartikeya as Kartik Swami, That is because like a Swami, he is a perfect celibate.

Kartikeya is worshipped in another form, although there are varying opinions about it. Khandoba is a popular deity amongst the (war-like) Marathas, the main temple being at Jejuri near Poona on a hillock. Khandoba is generally equated with Skanda; but another origin of Khandoba is cited and it is considered an aboriginal deity. It is also known as Mallari (Malhari?) Martand, thus connecting it with the Sun god. Enough evidence has been produced that Khandoba is from the Shiva family; but the presence of the dog near the god, the importance of yellow powder in its worship and the practice of dedicating boys and girls (as **Vaghya** and **Murali** respectively) are some of the novelties that do not go well with Skanda.

Kartikeya has another set of worshippers on what is popularly known as the **Champa Shasthi (=Margashirsha Shukla 6)**. They are the women from the Red Light area. Actually, the first six days of Margashirsha are ear-marked for the celebrations in Khandoba temples But if there is a Kartikeya temple nearby, those women prefer it. How this came about and since when, are unsolved riddles.

About the vehicle of the God, there are some variations; Is it a cock or a peacock? All descriptions seem to agree on the cock rather than the peacock.

Skanda received royal recognition when the Kushana King Kanishka used the four names Skanda, Mahasena, Kumara and Vishakha and images, all showing one deity, Kartikeya on his coins.

There are other royalties also who similarly honoured Kartikeya by adopting on their coinage the War-lord of the Gods, as Kartikeya in fact was. But during the later period something happened which reduced the son of Shiva to practical neglect.

With six faces and a dozen hands, with the position of the C-in-C of the Gods, and the top of a hill as a favourite haunt, the imposing Kartikeya should have been very popular throughout the

medieaval period, when fighting rather than peace was the common lot. What prejudices crept in the public mind, and drove his image out. of sight, one does not know. In the region south of the Krishna, Subramaniam, Shanmukham and their variations (Arumugam and the like) are common names of persons still in vogue. Not so to the north of the Krishna, where Skanda, Kartikeya or any of the synonyms of that son of Shiva, have no place in the living society. Rarely any person has that name.

While Ganesha continues to grow in popularity, with every one old and new, men and women, devotees of Kartikeya are generally not noticed. Along with Ganesha, his name is repeated in the devotional recitations, that's all.

The temple of Kartikeya in Maharashtra, in Nasik in particular, will in some way help popularising the god. At least some of the prejudices against the deity may be removed with the passage of time. Nasik is the place of a popular pilgrimage in Maharashtra on the holy Godavari, more sanctified because of Rama's stay along its banks. Nasik gains special significance in the eyes of pilgrims. For the performance of post mortem rites for the mother and of relations on the maternal side, orthodox people flock to Nasik even as for similar rites on the paternal side they prefer to visit Gaya on the Phalgu in in Bihar!

Whatever be the past of Kartikeya or the present prejudice against the Six-faced God, Maharashtra welcomes the brother of Ganesh with due reverence and respect in a place closely associated with Ramayana, during the exile of the Great deal hero Rama.

S. R. TIKEKAR

## குடமுழுக்கு நிகழ்ச்சி நிரல்

மார்கழி 11 மாலை
12 காலை } பால ஸ்தாபனம்

தை 12 26—1—72 புதன்கிழமை யாகசாலை தொடக்கம்

தை 14 28—1—72 வெள்ளிக்கிழமை காலை 9-10 கும்பாபிஷேகம்

தை 16 30—1—72 ஞாயிற்றுக்கிழமை தைப்பூசம்



காசி விசாலாட்சி அம்மன் கோவில்
குடமுழுக்கு விழா

அருள் பெறும் வழி

# காசி விசாலாட்சி கோவில் குட முழுக்கு விழா

விரோதிகிருது ஆண்டு ஐப்பசித் திங்கள் 15-ஆம் நாள் 1-11-1971 திங்கட்கிழமையன்று, ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடம் சங்கராச்சாரியார் சுவாமிகள், ஸ்ரீ சிருங்கேரி சங்ராச்சாரியார் சுவாமிகள், காசி மகாராஜா, இன்னும் பல பெரியோர்கள் அருளாலும், நகரத்தார் பெருமக்களுடைய பேருதவியாலும், ஸ்ரீ காசி விசாலாட்சி அம்மன் குடமுழுக்கு விழா இனிது நிறைவேறிற்று.

பெங்களூரிலிருந்து கைலாச ஆசிரமம், ஸ்ரீ திருச்சி சுவாமிகள் அவர்கள் காசிக்கு வந்து குடமுழுக்கு விழாவை, சீருடனும் சிறப் புடனும் நடத்தித் தந்தார்கள். ஆடவரும் பெண்டிருமாக நூற்றுக் கணக்கான நகரத்தார்கள் குடமுழுக்கு விழாவிற்கு, காசிக்கு வந்திருந் தார்கள்.

காமகோடிபீடம் ஆச்சாரிய சுவாமிகள் பூஜையில் வைத்து மந்திரித்த தகட்டை, அவர்களுடைய பிரதிநிதிகள் கொண்டு வந்தார்கள். காசி மஹாராஜா அவர்கள், விசாலாட்சி அம்மனுக்குப் பட்டு அனுப்பியிருந்தார்கள். சிருங்கேரி மடத்துப் பிரதிநிதிகளும், காசி விசுவநாதர் கோவில் பிரதிநிதிகளும் மாலை, பிரசாதம் முதலிய வற்றுடன் வந்து கலந்து கொண்டனர். இராமேசுவரம் இராமநாத சுவாமி கோவிலிலிருந்து, விசாலாட்சி அம்மனுக்குப் பரிவட்டம், பொட்டுக்காரை, கோடிதீர்த்தம், பிரசாதங்கள் ஆகியவற்றை ஒரு குருக்கள் மூலம் அனுப்பி யிருந்தனர். யாகசாலை, குடமுழுக்கு, முதலிய யாவும் குறித்தபடி குறித்த நேரத்திற்குள் சிறப்பாக நடை பெற்றன. வேதங்கள் முழங்கின. தேவாரம் ஓதப்பெற்றது. சாத்திர முறைப்படி எல்லாச் சடங்குகளும் செம்மையாய்ச் செய்யப் பெற்றன. குடமுழுக்கு விழாவைக் காண வசதியாக, சுற்றிலும் உள்ள வீட்டுக்காரர்கள் மாடியில் ஜமுக்காளம் விரித்தும் நாற்காலிகள் போட்டுக் கொடுத்தும் உதவினர். சகஸ்ர நாமம், அஷ்டோத்திர அர்ச்சனை, மஹாபிஷேகம் ஆகியவை நகரத்தார் பெயருக்கு நடத்தப் பெற்றன. உற்சவ விக்கிரகங்களும், தங்க விசாலாட்சி திருவுருவ மும் புதிதாகப் பிரதிட்டை செய்யப் பெற்ற மூலவர் திருவுருவமும் அனைவர் கண்ணையும் கருத்தையும் ஈர்க்கும் வண்ணம் அலங்கரிக்கப் பெற்றிருந்தன. விக்கிரகம், அங்கி வழங்கியவர்களுக்குப் பரிவட்டம் கட்டப் பெற்றன. ஒரு கல்வெட்டு திறக்கப் பெற்றது. துறவி களுக்கும் ஏழைகளுக்கும் உணவுபடைக்கப் பட்டது. நகர விருந்து மிக நல்ல முறையில் அமைந்திருந்தது.



விசாலாட்சி அம்மன் (புதிய திருவுருவம்)

தினமணி நாளிதழ் 'சுடர்' பகுதியிலும், காசியிலிருந்து வெளி வரும் ஆஜ் என்னும் ஹிந்தி நாளிதழிலும் கட்டுரைகள் வெளியாயின. இந்திய வானொலி நிலையம், குடமுழுக்கு வருணனையையும், திருச்சி சுவாமிகள் அவர்களின் ஆசியையும் ஒலிப் பதிவு செய்து சென்னை, புதுச்சேரி, திருச்சி நிலையங்களில் ஒலி பரப்பிற்று.

தலைவர் சோமநாதன் செட்டியார் அவர்கள், செயலாளர் கண. மெ. நா. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள், உதவிச் செயலாளர் மெ. செ. ச. மு. முத்துராமன் செட்டியார் அவர்கள், ஏஜண்டு வினைதீர்த்தான் செட்டியார் அவர்கள் ஆகியோர் அல்லும் பகலுமாக எல்லா வேலைகளையும் கவனித்தும் வந்திருந்தவர்களுக்கு வேண்டும் உதவிகளைச் செய்தும் குடமுழுக்கு விழாவை இனிது நடத்தி வைத்தார்கள்.

நன்கொடையாளர்களுக்கும், குடமுழுக்கு வேலையில் ஈடுபட்ட அனைவர்க்கும் எங்கள் நன்றி உரியது. அன்னை விசாலாட்சி அவர்களுக்கு அருள் பாலிக்க வேண்டுகிறோம்.



**காசி விசாலாட்சி அம்மன் கோவில் குடமுழுக்கு மலர்**

பக்கம் 6. கீழிருந்து 5-வது வரியில் 'நகரத்தார் செலவில் நிகழும்' என்ற சொற்களை நீக்கிவிட்டுப் படிக்க வேண்டுகிறோம்.

பக்கம் 42. '1908-இல் பிலவ ஆண்டு' என்பது '1908-இல் பிலவங்க ஆண்டு' என்று இருக்க வேண்டும்.





கார்த்திக்சுவாமி மந்திர் கோபுரத்தில் சுதைவேலை (1972)

நாசிக் பஞ்சவடியில் கோதாவரி நதியின் தோற்றம்